**புதியது**

# பால் அடங்கிய ஃபாரெக்ஸ் திட உணவு

# அதிக சுவையானது அதிக முழுமையானது

**ஏற்கெனவே பால் அடங்கியது**




**நீங்கள் பாசத்துடன் ஊட்டும் ஒவ்வொரு கவளமும் உங்கள் பாப்பாவின் வளர்ச்சிக்குச் சிறந்ததாகும்.**

பால் அடங்கிய ஃபாரெக்ஸ் திட உணவு. இதைக் கலப்பது எளிது. பாப்பாவுக்கு ஊட்டுவதும் எளிது.

பாப்பாவின் வளர்ச்சிக்கு இன்றியமையாத புரதம் நிரம்பியது. மிக ஆரோக்கியமான இரத்தத்திற்குக் கூடுதல் இரும்புச்சத்து கொண்டது. உறுதியான பற்களையும் எலும்புகளையும் பெற சரியான விகிதத்தில் கால்ஷியமும் ஃபாஸ்ஃபரஸும் அடங்கியது. பாப்பாவின் மென்மையான ஜீரண சக்திக்கென முன்கூட்டிப் பக்குவம் செய்தது.

பால் அடங்கிய ஃபாரெக்ஸ் திட உணவு. அதிக முழுமையான திட உணவு.

உடல் நலத்தின் உறைவிடம்—

---

**இலவசம்!** குழந்தையின் முதலாண்டுப் புத்தகம்: உங்களது பிரதியைப்பெற தபால் மற்றும் இதர செலவிற்கு ரூ. 1/— தபால்தலை உள் வைத்து எழுதுவீர் இம்முகவரிக்கு—தபால் பெட்டி எண் 19119, (FCM-19) பம்பாய் 400 025.

---

CLARION/8/GX/4/203 TAM

# நக்ஸலைட்டுகள் ஓய்ந்து போகிறார்கள்

டி. ஐ. ஜி. கூறுகிறார்:



• டி. ஐ. ஜி. தேவாரம்.

வேலூரில், டி. ஐ. ஜி. தேவாரம் அவர்களைச் சந்தித்தேன்.

''நக்ஸலைட்டுகளின் நடமாட்டம் குறைந்து விட்டது போலிருக்கிறதே!''

''நடமாட்டம் குறைந்துவிட்டது என்று சொல்ல முடியாது. தீவிரம் குறைந்துவிட்டது என்று வேண்டுமானால் சொல்லலாம். வெட்டு, குத்து, கொலை, வெடிகுண்டு வீச்சு போன்ற தீவிரத் தனங்களைக் கைவிட்டுவிட்டனர். இதற்கு அடிப்படைக் காரணம், வன்முறையால் எந்த ஒரு பெரிய சமூக மாற்றத்தையும் ஏற்படுத்திவிட முடியாது; ஜனநாயக முறைகளுக்கு முற்றுப்புள்ளி வைப்பது, புரட்சி வெடிக்கச் செய்வது, ஆட்சி மாற்றம் ஏற்படுத்துவது போன்றவற்றைச் சாதிக்க வன்முறை பயன்படாது என்பதை அவர்களாகவே உணர்ந்து வருவதுதான். அவர்கள் இப்போது வேறுவிதமாய்ச் செயல்பட்டு வருகிறார்கள்.''

''வேறு விதம் என்றால்?''

''மக்களின் மனத்திலே இப்போது உள்ள ஆட்சி, ஆட்சிமுறை இவைமேல் எல்லாம் ஒருவித வெறுப்பை ஏற்படுத்தி, ஒன்றுபட்டு புரட்சி செய்யத் தூண்டுகிறார்கள். இதற்காகத்தான் கடந்த எலெக்ஷனின் போது கூடத் 'தேர்தலைப் புறக்கணிக்கச் சொல்லிப் பிரசாரம் செய்தார்கள். தவிர தெரு நாடகங்கள் போடுகிறார்கள்.''

''தெரு நாடகங்களா? எதற்கு? தம் கொள்கைகளைப் பரப்பவா?''

''ஆமாம்! சுரண்டலைக் கண்டிக்கிற புரட்சிக் கருத்துக்களை மையமாய்க் கொண்ட நாடகங்களைப் பல கிராமத் தெருக்களில் போடுகிறார்கள். பிரசாரம் செய்கிறார்கள். அவைகளில் நம் அரசியலமைப்புக்கு எதிரான கோஷங்கள் இருக்கும். தவிர கொள்கைகளைப் புத்தகங்களாயும் அச்சிட்டு மலிவு விலையில் விற்கிறார்கள்.''

''இவர்கள் பிரசாரத்துக்கு மக்களிடையே வரவேற்பு எப்படி இருக்கிறது?''

''மக்கள் இவர்கள் நாடகங்களையோ, கருத்துக்களையோ, பெரிதாய் எடுத்துக் கொள்ளவில்லை. இதற்கு ஒரு சின்ன உதாரணம். தேர்தல் புறக்கணிப்புப் பற்றி இவர்கள் பலமான பிரசாரம் செய்தார்கள்! இருந்தும் என்ன பயன்? சென்ற முறைதானே அதிகபட்ச வாக்குப் பதிவு நடந்தது!''

''தீவிரவாதிகள் வன்முறைச் செயல்களில் இன்று ஈடுபடாமல் இருக்கலாம். ஆனால் ஏற்கெனவே வன்முறைகளில் ஈடுபட்டுப் போலீஸ் தேடிவருகிற தீவிரவாதிகளின் நிலை என்ன?''

''நக்ஸலைட், பாலன், 80—ல் நடந்த போலீஸ், நக்ஸலைட் மோதலில், போலீஸால் சுடப்பட்டார். இன்னொரு நக்ஸலைட் அப்பு, போலீஸ் 'ரெகார்டு படி' இன்னும் தலைமறைவாய் இருக்கிறார். ஆனால் நக்ஸலைட்டுகள், ''போலீஸால் அவர் கொல்லப்பட்டுவிட்டார்'' என்கிறார்கள். இது தப்பு. மற்றொரு நக்ஸலைட் தமிழ்வாணன் போலீஸால் தேடப்பட்டு வருகிறார். இப்போது பிரச்னை என்னவெனில், நக்ஸலைட்டுகளைப் போலீஸ் பிடித்தாலும், கோர்ட்டில் நிறுத்தினால் யாரும் எதிராகச் சாட்சி சொல்லப் பயப்படுகிறார்கள். போலீஸ் என்னதான் சாட்சிகளுக்குப் பாதுகாப்புத் தருவதாய் உறுதி சொன்னாலும், அவர்கள் தீவிரவாதிகளுக்குப் பயப்படுகிறார்கள். இதனால், குற்றம் நிரூபிக்கப்பட முடியாமல், அவர்கள் தப்பிவிடுகிறார்கள்.''

''நக்ஸலைட்டுகளின் நிதிவசதி எப்படி?''

''மலிவு விலைப் புத்தகம் விற்றும், தெரு நாடகங்கள் நடத்திக் கிடைக்கின்ற வசூலாலும் ஏதோ கொஞ்சம் நிதி திரட்டுகிறார்கள். இன்று அரசியல் கட்சிகளின் பணவசதியுடன் ஒப்பிட்டால், நக்ஸலைட்டுகள் ரொம்ப ஏழைகள்.''

''உங்களுடைய நக்ஸலைட்டுகள் புனர்வாழ்வுப் பணி எப்படி நடக்கிறது?''

''மிக நல்ல முறையில், நக்ஸலைட்டுகளைப் பிடிக்கிற பணியுடன் கூடவே, மனம் திருந்திய நக்ஸலைட்டுகள், நக்ஸலைட் அனுதாபிகள் ஆகியோரை வன்முறை வழியிலிருந்து மீட்டு, புனர் வாழ்வு அளிப்பதிலும் கவனம் செலுத்தி வருகிறோம். ஆனால் இந்தப் புனர் வாழ்வுச் சலுகை பெறும் நக்ஸலைட் மனம் திருந்தியவராய் இருந்தாலும் அவர் மீது கிரிமினல் குற்றம் எதுவும் பதிவாகி இருக்கக் கூடாது என்பது நிபந்தனை! ஆங்காங்கே நடைபெறும் ஊரக வளர்ச்சித் திட்டம் போன்றவற்றில் திருந்திய நக்ஸலைட்டுகளுக்கு வேலை தருகிறோம். தேசிய மயமான பாங்குகள் மூலம் சிலருக்குக் கடன் வசதி செய்து கொடுத்துள்ளோம். அதனால் அவர்கள் சொந்தக்காலில் நிற்கிறார்கள். இதுவரை சுமார் ஒரு டஜன் பேரைப் போலீஸ் துறையிலேயே வேலைக்குச் சேர்த்துக்கொண்டிருக்கிறோம். அவர்களும் ரொம்ப விசுவாசமாய் வேலை செய்கிறார்கள். நக்ஸலைட் இயக்கமே அடிப்படையில் பார்த்தால் வேலையில்லாத் திண்டாட்டத்தினால் உருவானதுதானே!''

பேட்டி: மௌலஷ்மி.

# ஓட்டல்கள் ஜாக்கிரதை

ஓட்டல்களில் சாப்பிடுகிற ஐட்டங்கள் சூடாகவும், வாய்க்கு ருசியாகவும் இருப்பது என்னவோ உண்மையாக இருக்கலாம். ஆனால் இதுவரை நமக்குத் தெரியாத பல விஷயங்களைத் தெரிந்து கொண்ட பின்...? அப்படித் தெரிவிக்கிற முயற்சியே இக்கட்டுரை.

* * * * *

வீட்டில் நிறைய சாப்பிடுகிற ஒருவர், ஓட்டலில் சாப்பிடும் போது — அதுவும் 'அளவில்லாத சாப்பாடு' சாப்பிடும் போது — கொஞ்சம் சாப்பிட்டதும் வயிறு நிரம்பி விடுகிறது! அதன் மர்மம் என்ன? விஷயம் வேறொன்றும் இல்லை. நீங்கள் நன்றாய்ச் சாப்பிட்டுவிட்டு, வெற்றிலை, பாக்கு, சுண்ணாம்பு போட்டுக் கொள்வீர்கள் அல்லவா? அதற்கு அச்சாரமாய், ஓட்டல்காரர்கள், சாதம் வடிக்கும் போதே கொட்டைப் பாக்கை ஒரு துணியில் கட்டி, அரிசியுடன் போட்டு விடுவார்கள். கூடவே சிறிதளவு சுண்ணாம்பு நீரையும் ஊற்றி விடுவார்கள். பிறகென்ன? கொஞ்சம் சாப்பிட்டதும் வயிறு நிரம்பிவிடும்; பார்க்கவும் வெள்ளை வெளேர்!

சாம்பாருக்குப் போட, துவரம் பருப்பு விலை அதிகம். ஆகவே மலிவான கேசரிப் பருப்பைப் போட்டுவிடுவார்கள். இந்தக் கேசரிப் பருப்புக்குக் கொஞ்சம் உவர்ப்புச் சுவை. எனவே வெல்லம் போட்டு இதைச் சரிக்கட்டுவார்கள். இதுதான் ஓட்டலில் சாம்பார் லேசாய்த் தித்திப்பதின் ரகசியம்.

இட்லி, தோசைக்கு மாவு அரைக்கும் பொழுது சோடா மாவு கலந்துவிட வேண்டியதுதான். உளுத்தம் பருப்பிற்குப் பதிலாக சேப்பங்கிழங்கைப் போட்டு அரைத்துவிடுவார்கள். இல்லையெனில், இருக்கிறது வெண்டைக்காய்க் காம்பு. (சாம்பாருக்கு வெண்டைக்காய் போட்டபின் மீதி) மாவில் மெது மெதுப்புத் தானாகவே வந்துவிடுகிறது.

காலையில் கடாயில் எண்ணெய் விட வேண்டியதுதான். அதிலே பூரி, பஜ்ஜி என்று அத்தனையும் செய்ய வேண்டியது. எண்ணெய் மீதி இருக்கும். அதையே சமையலுக்கு உபயோகித்துக் கொள்வார்கள். அப்படியும் மீதி இருந்தால் அது 'கடா'யிலேயே இருக்கும். மறுபடி அதிலேயே புது எண்ணெய் கொஞ்சம் ஊற்றிவிட்டு, மறுபடி பொரிப்பதோ, வறுப்பதோ தொடரும். மீதி அப்படியே வைக்கப்பட்டு, மறுநாள் பயன்படுத்தப்படும்.

ஸ்வீட் செய்யப்பயன்படும் வனஸ்பதி'யிலும் (மிருக?) கொழுப்புக் கலப்படமாம். பொங்கல் போன்றவற்றில் மிளகுக்குப் பதிலாய் அந்திமந்தாரை விதையைப் பயன்படுத்துவதுண்டாம்.

தேங்காய்ச் சட்னியில், தேங்காய்க்குப் பதி

• சுத்தத்துக்கும் ஓட்டல் சமையலறைக்கும் ரொம்ப தூரம்.



லாய்ப் புண்ணாக்குதான். சில ஓட்டல்களில் சட்னியில் தேங்காய் இருக்கிறதோ இல்லையோ, தேங்காய் நார் இருக்கும்படி பார்த்துக்கொள்வார்கள். (சாப்பிடும் அப்பாவி அதைத் தேங்காய்ச் சட்னி என்று நம்புவதற்காக).

காப்பி, சில ஓட்டல்களில் 'திக்'காக இருக்கும். வருகிறவர், காப்பி சாப்பிட்டுவிட்டு, 'காப்பி பிரமாதம்' என்று சர்ட்டிபிகேட் கொடுப்பார். ஆனால் உண்மை என்ன? அந்தக் காப்பி தயாரிக்கப்பட்டது பருத்திக் கொட்டைப் பாலில். அதாவது, பருத்திக் கொட்டையை நன்றாய் ஊற வைத்து, அதைப் பிழிந்து எடுத்துக் கிடைக்கிற 'திக்'கான பாலிலோ, அதைப் பாலுடன் கலந்தோ காப்பிப் போட்டுக் கொடுக்கிறார்கள்.

ஜூஸ், சர்பத் கடைகளில் நாள் முழுவதும் சேரும் எலுமிச்சைத் தோல்கள், மறுநாள் ஓட்டல்களில் எலுமிச்சை ஊறுகாயாக மறுபிறவி எடுப்பதும் சகஜம்.

சமையலுக்குப் பயன்படுத்தப்படும் காய்கறிகளும் தரமானவை அல்ல. மொத்த வியாபாரிகளுடன் செய்துகொண்ட விசேஷ ஏற்பாட்டின்படி, அங்கே 'மீந்து போன 'சீப்'பான காய்கறிகளை வாங்கி, ஓட்டலில் பயன்படுத்த வேண்டியது. சமைக்கும்போது, நிறைய உப்பு, காரம் போட்டுத் தாளித்துச் சமாளித்துவிட வேண்டியது.

முதல் நாள் மீந்துபோனவற்றை எல்லாம் ஒன்றாய்ப் போட்டு, மறுபடி தயாரிக்கப்படுவதுதான் 'வடைகறி!' நாமும் சப்புக் கொட்டிக் கொண்டு சாப்பிட்டுவிட்டு வருகிறோம்.

இதுவரை சொன்னதெல்லாம், ஓட்டல்களில் நடப்பனவைகளில் ஒருசில. இவையெல்லாம் ஒவ்வொரு ஓட்டல்களிலும் நடக்கின்றன என்று சொல்ல முடியாது. இந்தப் பட்டியலில் உள்ளவை மட்டும்தான் நடைபெறுகின்றன என்றும் சொல்ல முடியாது. இதைத் தூக்கிச் சாப்பிடுகிற விவகாரங்கள் கூட நடந்து கொண்டிருக்கலாம். யார் கண்டது?

உதாரணத்துக்கு ஒன்று: ஒரு தடவை சென்னையிலுள்ள ஒரு இயக்கத்தின் தலைவருக்கு மதுரையிலிருந்து ஒரு கடிதம் வந்தது. அதில் மதுரையில் ஒரு ஓட்டலின் பெயரைக் குறிப்பிட்டு, அங்கே சாப்பாட்டிற்குப் போட்ட இலைகளைத் தூக்கி எறியாமல், கழுவி, துண்டுகளாக்கி, டிபனுக்குப் பயன்படுத்துகிறார்கள் என்று குறிப்பிடப்பட்டிருந்தது.

ஓட்டல்காரர்களுடைய அகராதியை எடுத்துப் பார்த்தால், அதிலே நிச்சயம் 'சுகாதாரம்' என்கிற வார்த்தை இருக்காது. பொதுவாய் ஓட்டல்களில் சர்வர்களின் சுத்தம் ஊரறிந்ததே. பார்க்கப் பளிச்சென்று சீருடை அணிந்திருக்கிற சர்வர்கள் விஷயத்தில் கூட, 'சுத்தம்' சந்தேகத்துக்குரியதே!

பல ஓட்டல்களில், சாப்பிடுவதற்கேற்ற சுத்தமான சூழ்நிலையே கிடையாது. முன்னால் சாப்பிட்டவரின் ஞாபகார்த்தமாய்



• பரிதாபத்துக்குரிய சிறுவர்கள்



• நட்சத்திர ஓட்டல்களில் கலப்படம் இல்லை. சுத்தம் இருக்கும். ஆனால் விலை... அம்மாடியோவ்!



• தெரு ஓர நடமாடும் ஓட்டல்களில் படுபிஸியான வியாபாரம்.

சாப்பிட்டது மீதி கொஞ்சம் டேபிளிலேயே ஒட்டிக் கொண்டிருக்கும். தன் அழுக்கு விரல் விட்டுத் தண்ணீர் தராத சர்வர்களைப் பார்க்கவும் முடியுமோ?

சிறிய தட்டில் தோசையை மடித்துக் கொண்டு வந்து, சர்வர் டேபிளில் வைக்கும் போது, தோசையின் ஒரு பகுதி டேபிளை முத்தமிடும். சாப்பிடவே வாய் குமட்டும்.

ஓட்டலில் சாப்பிடுகிற இடத்தில்தான் இத்தகைய சுகாதாரக் கேடான சூழ்நிலை என்றால், கை கழுவும் இடத்தில் இன்னும் மோசம்! உள்ளே கிச்சனில் — கேட்கவே வேண்டாம். ஒரு தடவை நம் ஊர் ஓட்டல் கிச்சன்களைப் பார்த்துவிட்டால், மறுபடி ஓட்டலில் சாப்பிடுகிற துணிச்சல் எத்தனை பேருக்கு வரும் என்பது விவாதத்துக்குரிய விஷயம்.

வியர்வை சொட்ட, கையில் பீடி, சிகரெட்டுடன் மணிக்கணக்கில் உட்கார்ந்திருக்கிற சமையற்காரர் ஒரு கையால், வியர்வையை உதறிவிட்டு, மறுபடி தன் வேலையைப் பார்ப்பார். சமையல் பாத்திரங்களின் சுத்தமே சந்தேகத்துக்குரியது. சமையலறை முழுவதுமே ஒரே சொத சொதப்பாய் இருக்கும்.

சாப்பிட்ட தட்டு, டம்ளர்களைக் கழுவுகிற சங்கதிகளைப் பற்றிச் சொல்லவே வேண்டாம். ஒரு தொட்டியில், தண்ணீரை நிரப்பி அதிலேயே எல்லாவற்றையும் போட்டு, கழுவி எடுக்க வேண்டியதுதான். எண்ணைப் பிசுக்குப் போகாது. ஒருசில ஓட்டல்களில் (தொட்டிகளில்) தண்ணீருக்குப் பதிலாய் வெந்நீர் ஊற்றிக் கழுவுவதுண்டு.

விசாரித்துப் பார்த்தவரை, மிகப்பெரிய ஓட்டல்களில் மாணவாரியாக விலை இருப்பதால் கலப்படமோ, சுகாதாரக் கேடோ இல்லை என்று தெரிந்தது.

ஓட்டல்கள் போலவே இன்னொரு வகைதான், 'மெஸ்'கள். இங்கே சாப்பாடு மட்டும்தான். டிபன் இல்லை. விலை, ஓட்டல்கள் போல அவ்வளவு அதிகமில்லை. காலை ஒன்பது மணி முதல் பகல் ஒரு மணிவரையிலும், மறுபடி இரவு 7 மணி முதல் பத்து வரையும் இவைகளில் சாப்பாடு கிடைக்கும். இங்கே சாப்பாடு மூன்று ரூபாய் முதல் நான்கு, நான்கரை வரை ஆகிறது. மாதாந்திரக் கார்டு (பால் கார்டு போல) உண்டு. அவர்களுக்குக் கொஞ்சம் பணச்சலுகை உண்டு. இதிலும் ஐயர் மெஸ், ஆந்திரா மெஸ், கேரளா மெஸ், உடுப்பி மெஸ், நான்—வெஜ் மெஸ் எனப் பல வகைகள். ஓட்டல்களை விட, இங்கே தனிப்பட்ட முறை கவனம் அதிகம் இருக்கும். இவைகளிலும் சுத்தம், சுகாதாரம் எல்லாம் ஓட்டல்கள் போலத்தான். சென்னையில் மட்டும் சுமார் 600 மெஸ்கள் இருக்கும்.



# வளரும் வயதில் குழந்தைகளுக்குத் தேவை காம்ப்ளான்



**காம்ப்ளான் ஒன்றில்தான் அவர்களுக்கு அன்றுடம் தேவைப்படும் 23 ஊட்டச் சத்துக்கள் அடங்கியுள்ளன.**

சாதாரணமாக 15 அல்லது 16 வயதிற்குள் குழந்தைகளின் வளர்ச்சி பெரும்பாலும் முழுமையடைந்து விடுகிறது.

அவர்களுடைய வளர்ச்சிக்கு நேரடியாக உதவுவது புரதம் என்ற சத்துதான். ஆகவே உங்கள் குழந்தைகளுக்கு தேவை காம்ப்ளான்—இப்போது. காம்ப்ளான் சிறந்த புரதம் கொண்டுள்ளது—பால் புரதம் (20%) அது 22 மூலதார சத்துணவுகளும் கொண்டதாகும்.

காம்ப்ளான் கிடைக்கிறது இனிய சுவைகளில்.

23




மூலதார சத்துணவுகள் திட்டமிட்ட விகிதங்களில்

பால் சேர்த்திடத் தேவையில்லை.



## காம்ப்ளான்® — திட்டமிட்ட பரிபூர்ண உணவு

GK & E. B84. GLC. 120 Tm

இவைகளை நம்பிச் சில ஆயிரம் பேர்களாவது இருப்பார்கள்.

* * * * *

ஓட்டல்களிலாகட்டும், மெஸ்களிலாகட்டும், பல ஆண்டுகள் சாப்பிடுபவர்களுக்கு உடலில் 'டைஜஸ்டிவ் ஸிஸ்டம்' பாதிப்புக்குள்ளாகிறது. வயிறு கெட்டு, அல்சர் வருவது சர்வ சகஜம். பெரும்பாலோருக்கு நிச்சயம் வயிற்றில் பூச்சித் தொல்லையும் இதன் விளைவாக, இடுப்பின் பின் பகுதியில் வலியும் நிரந்தரமாய் இருக்கும்.

* * * * *

இனி ஓட்டலில் வேலை செய்பவர்களின் வாழ்க்கையைப் பற்றித் தெரிந்துகொள்ளலாமா?

இதற்கென டேபிள் துடைக்கிற ஏழெட்டு வயது சிறுவர்கள் முதல் கால் செஞ்சுரி சர்விஸ் போட்ட சர்வர்கள் வரை சுமார் ஒரு டஜன் பேரைச் சந்தித்துப் பேசினோம். சிலர் பேசவே பயந்தனர்; சிலர் நிறைய பேசினர். சிலர் பெயரையோ மற்ற விவரங்களையோ வெளியிட மாட்டோம் என உறுதி தந்தவுடன் பேசினர்; அவர்களின் பரிதாபத்துக்குரிய வாழ்க்கையைப் பற்றித் தெரிந்து கொண்டோம்.

ஓட்டல்களில் வேலை செய்கிற சிறுவர்களுக்கு, சராசரியில் அதிகபட்சம் இருபது, இருபத்தைந்து வரை மாதத்துக்குக் கிடைக்கும்; ஒரு சர்வருக்குத் தினமும் நாலு ரூபாய் முதல் ஏழு ரூபாய் வரை கிடைக்கிறது. முதலாளி மனம் வைத்தால், வருட இன்க்ரிமெண்ட் ஒரு ரூபாயிலிருந்து ஐந்து வரை போகும். லீவ் எடுக்க முடியாது. எடுத்தால் சம்பளம் கட்!

டிப்ஸ் பெற அனுமதிக்கும் ஓட்டல்கள் சிலவற்றில் சம்பளம் தரவே மாட்டார்களாம் சர்வர்களுக்கு. அப்படிக் கொடுத்தாலும் மிகக் குறைச்சல் தான்.

ஒருஓட்டல் ஊழியர் மொத்தம் 8 மணி நேரம் வேலை செய்ய வேண்டும் என்று கணக்கு. ஆனால் நடுவில் கொஞ்சம் ரெஸ்ட் எடுத்துக் கொண்டாலும் மொத்தம் பத்து மணி நேரமாவது வேலை செய்ய வேண்டியிருக்குமாம். அதற்கும் அதிகமாய் வேலை செய்தால், மணிக்கு ஒரு ரூபாய் போல ஓவர் டைம் செய்ததாய்க் கணக்கிட்டுக் கொடுப்பார்களாம்.

கடந்த 24 வருடங்களாய் ஒரு ஓட்டலில் சர்வராய் இருக்கும் ஒருவருக்கு இப்போது தரப்படும் சம்பளம் ரூபாய் 210/—. எடுத்ததும் எவருக்கும் ஓட்டலில் அதிகபட்சம் அறுபது வரைதான் தருவார்களாம்.

இந்தச் சம்பளம் மிகக் குறைவுதான் என்பது எல்லோருக்கும் தெரிந்ததுதான். இருந்தாலும் நிறைய பேர் ஓட்டலில் வேலை செய்கிறார்களே! இது ஏன்? பல சர்வர்களிடமும் கேட்ட போது அவர்கள் ஒருமித்துச் சொன்ன பதில் இதுதான்: "ஓட்டலில் இரண்டு வேளை டிபன், இரண்டு வேளைச் சாப்பாடு இலவசமாய்க் கிடைத்துவிடுகிறது. இதில் அளவுக் கட்டுப்பாடும் கிடையாது. இடையிடையே காப்பி. இதையெல்லாம் கணக்குப் போட்டுப் பார்த்தால், எப்படியும் பதினைந்து இருபது ரூபாயாகும். மாதத்துக்கு நானூற்றைம்பது அறுநூறு ஆகிறது. யூனிபாரம் வழங்குகிற ஓட்டலாயிருந்தால், துணிப் பிரச்னையும் பெரிதில்லை. மற்ற ஓட்டல்களிலும் இரண்டு லுங்கி, பனியனில் சமாளித்துவிடலாம். தங்கும் இடப் பிரச்னையும் கிடையாது. ஆக ஒரு மனிதனின் அடிப்படைத் தேவைகளான உணவு, உடை, இடம் மூன்றுமே கிடைத்துவிடுகிறது. கைச்செலவுக்கும் ஏதோ கிடைத்துவிடுகிறது. இப்படியே ஒவ்வொருவரும் தம்மைச் சமாதானப் படுத்திக் கொள்கிறோம்."

ஒரு சர்வரிடம் கேட்டோம், "ஏன் இதைவிட ஒரு நல்ல உத்தியோகமாய்ப் பார்த்துக் கொள்ள வேண்டும் என்கிற ஆசை உங்களுக்குக் கிடையாதா?" அவரது பதில் மனத்தை சஞ்சலப்படுத்திவிட்டது. "எனக்கு மட்டும் இல்லிங்க, என்னைப் போல ஓட்டல்ல வேலை பார்க்கிற அத்தனை பேருக்குமே, நல்ல உத்தியோகம் பார்க்கணும்; நல்லா வசதியா இருக்கணும்னுதான் ஆசை. ஆசை மட்டும் இருந்தால் போதுமா? அது நடக்காத காரியமாச்சே!

"பொதுவாக இந்த மாதிரி வேலைக்கு வர்றவங்க அவ்வளவாப் படிக்காதவங்கதான். எங்களுக்கு எங்கே வேலை செய்தாலும் மாசம் முந்நூறு, நானூருக்கு மேலே தர மாட்டாங்க. அந்தச் சம்பளம் எப்படிங்க போதும்? ஆனால், ஓட்டல்லே வேலை செஞ்சா சாப்பாடு, இடம் எல்லாம் ஃப்ரீ. கைச்செலவுக்கும் பணம். அதனாலே ஏதோ இருக்கிறதை வெச்சி சந்தோஷப்பட்டுக்க வேண்டியதுதாங்க!

"ஏன்! நான் கூட ஏழெட்டு மாசம் ஓட்டல்லே வேலை பார்த்துட்டு, வேற ஒரு இடத்தில வேலைக்குப் போனேன்! அங்க இருநூத்தம்பது தந்தாங்க. வாடகைக்கும், ஒரு வார சாப்பாட்டுக்குமே பத்தல! திணறிட்டேன். பழைய ஓட்டலுக்கே வந்து, முதலாளிகிட்ட சொல்லி அழுதேன். மறுபடி வேலைக்குச் சேர்த்துக்கிட்டார்." இதுபோலப் பலர்.

சுமார் 45 வயதான ஒரு சர்வரிடம் கேட்டோம், "ஏங்க, கல்யாணம், குடும்பம்னு ஏதாவது?"

அவர் முகம் வாடிவிட்டது; வருத்தத்துடன் சொன்னார்: "நம்ம வரைக்கும் பிரச்னை இல்லே. வாங்கற நூறு இருநூறை வச்சிக்கிட்டு, எப்படிங்க குடும்பம் நடத்தறது? இருபது வயசுல ஓட்டல்ல வேலைக்கு வந்து, இருபத்தி அஞ்சி வருஷம் குப்பைக் கொட்டியாச்சு. இன்னொரு விஷயங்க! ஓட்டல்ல வேலை செய்யறவங்களுக்கு, யாரும் சுலபமா, பொண்ணு தர மாட்டாங்க! இது தாங்க சர்வர் குலத்துக்கே உண்டான சாபம்!"



# வானதி வழங்கும் புதிய சமூக சரித்திர நாவல்கள்

| | ரூ. பை |
|---|---|
| **பாலகுமாரன்** | |
| இரும்பு குதிரைகள் | 22-00 |
| என்றென்றும் அன்புடன் | 14-00 |
| **வாஸந்தி** | |
| தூரத்தும் நினைவுகள் அழைக்கும் கனவுகள் | 17-00 |
| பறவைகள் பறக்கின்றன | 10-00 |
| மௌனத்தின் குரல் | 12-00 |
| நழுவும் நேரங்கள் | 14-00 |
| **சிவசங்கரி** | |
| மாலையில் பூக்கும் மலர்கள் | 14-00 |
| 47 நாட்கள் | 14-00 |
| போகப் போக | 14-00 |
| கப்பல் பறவை | 12-00 |
| பாலங்கள் | 19-00 |
| தகப்பன் சாமி | 10-00 |
| திரிசங்கு சொர்க்கம் | 12-00 |
| **பி வி. ஆர்.** | |
| ஆடாத ஊஞ்சல் | 15-00 |
| மதுரநாயகி | 12-00 |
| அனுஷா | 10-00 |
| **எஸ். எஸ். தென்னரசு** | |
| ராஜ பவனம் | 6-00 |
| ஒரு சுமங்கலியின் சுய சரிதம் | 6-00 |
| **வையவன்** | |
| ஜங்ஷனில் ஒரு மேம்பாலம் | 12-00 |
| **கௌசிகன்** | |
| அழகி — | 16-00 |

| | ரூ. பை |
|---|---|
| **சாண்டில்யன் (சரித்திர நாவல்)** | |
| ராஜ்யஸ்ரீ | 22-00 |
| மன்னன் மகள் | 45-00 |
| கன்னிமாடம் | 40-00 |
| கடல்ராணி | அச்சில் |
| ராஜபேரிகை | 50-00 |
| **கோவி. மணிசேகரன்** | |
| காஞ்சிக் கதிரவன் (ஆனந்தவிகடனில் வெளிவந்த சரித்திர நாவல்) | 20-00 |
| கங்கை நாச்சியார் | 14-00 |
| **ஏ. நடராஜன்** | |
| தேடிவந்த தெய்வம் | 13-50 |
| **உமாசந்திரன்** | |
| இதய ஜீவிதம் | 18-00 |
| வேர்ப்பலா | 12-00 |
| முள்ளும் மலரும் | 20-00 |
| **அநுராதாரமணன்** | |
| கூட்டுப் புழுக்கள் | 18-00 |
| **கண்ணதாசன்** | |
| விளக்கு மட்டுமா சிவப்பு | 25-00 |
| அரைவிட ரகசியம் | 7-00 |
| பிருந்தாவனம் | 12-00 |
| ஆச்சி | 9-00 |
| சேரமான்காதலி (சரித்திரநாவல்) சாகித்ய அகாதெமி பரிசு பெற்றது | 40-00 |
| **Dr. பானுமதி** | |
| மாமியார் | 10-00 |

- தேவையான புத்தகங்களை V. P. P. யில் பெற கடிதம் எழுதுங்கள். V.P.P. தபால் செலவு தனி.
- வானதி ஷோரூமுக்கு விஜயம் செய்தால் நேரில் பார்த்து புத்தகங்களை வாங்கலாம். புத்தக வியாபாரிகள் — நூல் நிலையங்களுக்கு தக்க கழிவு உண்டு.
- 1985 ஆண்டு வானதி இலவச புதிய புத்தக விலைப் பட்டியலுக்கு இன்றே எழுதுங்கள்.

விவரங்களுக்கு

**வானதி பதிப்பகம்**

13, தீனதயாளு தெரு, தி.நகர், சென்னை-17. போன்: 442810

# உங்கள் முதலீட்டிற்கும் உங்கள் குடும்பத்திற்கும் பாதுகாப்பளிப்பது



## ULIP ஒன்றே!

யூனிட் லிங்க்டு இன்சூரன்ஸ் ப்ளான் (ULIP) அளிக்கும் பயன்களை அறிந்து கொள்ளுங்கள்.

மருத்துவ சோதனையின்றி உங்களுக்கு ஆயுள் இன்சூரன்ஸ் பாதுகாப்பு உங்கள் இலக்குத் தொகைக்குச் சமமாக கிடைக்கிறது.

மேலும் ரூ. 15,000 வரை விபத்து இன்சூரன்ஸ் பாதுகாப்பும் இலவசமாகக் கிடைக்கிறது.

இவை தவிர, உங்கள் முதலீடு கணிசமான டிவிடெண்ட் பெறுகிறது.

நீங்கள் செலுத்தும் தொகைக்கு வருமானவரி சலுகைகளும் உண்டு!

நீங்கள் 18 முதல் 45½ வரை வயதுள்ளவராயிருப்பின் ULIP திட்டத்தில் சேரலாம். உங்கள் இலக்குத் தொகை குறைந்தபட்சம் ரூ. மூவாயிரமாகவும் அதிகபட்சம் ரூ. பன்னிரெண்டாயிரமாகவும் இருக்கலாம். பத்து வருடமோ அல்லது பதினைந்து வருடமோ நீங்கள் ULIP திட்டத்தில் முதலீடு செய்யலாம்.

முதல் ULIP திட்டத்தில் சேர்ந்து மூன்றாண்டுகளுக்குப் பின் நீங்கள் இலக்குத் தொகை ரூ. 12,000த்திற்கு மற்றுமொரு ULIP திட்டத்தில் சேரலாம்.



**யூனிட் டிரஸ்ட் ஆஃப் இந்தியா**

(ஒரு பொதுத்துறை நிதி நிறுவனம்)
தலைமை அலுவலகம்: பம்பாய் 400020

பிராந்திய அலுவலகம்: ஜெமினி பார்சன், 46, கென்னட் லேன் ரீ, சென்னை 600001. போன்: 27433
ஆந்திரப்பிரதேச அலுவலகம்: 27/11/68, பேரி சாலை, கவர்னர்பேட்டை, விஜயவாடா 520002. போன்: 63964
கேரள அலுவலகம்: XII/758, தேக்கடம் சாலை, திருச்சூர் 680001. போன்: 24690

தமிழ்நாட்டில் உள்ள எங்கள் முக்கிய பிரதிநிதிகள்: • கோவை, பெரியார், நீலகிரி மாவட்டங்களுக்கு: திரு. எ. தனபால், 30, ஹாஸ்பிடல் ரோடு, கோவை 641018. போன்: 34776 (அலு) • மதுரை, இராமநாதபுரம் மாவட்டங்களுக்கு: திரு. எம். இராமமூர்த்தி, 30, எல்.ஐ.சி. காலனி, மதுரை 625002. போன்: 30160 (அலு) • சேலம் மாவட்டத்திற்கு: திரு. என்.கே. இளங்கோவன், 155, கவர்னர்மீனா தெரு, அன்னதானப்பட்டி, சேலம் 636002. போன்: 64302 (வீடு) • தஞ்சை மாவட்டத்திற்கு: திரு. கே. முத்துசாமி, 52-எ, வ.உ.சி. நகர், தஞ்சை 613007. போன்: 1224 (வீடு) • நெல்லை, குமரி மாவட்டங்களுக்கு: திரு. எம்.எம். காஜா, பக்காளி பில்டிங் அனெக்ஸ், 41-B, திருவனந்தபுரம் ரோடு, பாளையங்கோட்டை 627002. போன்: 4520 (அலு) 5395 (வீடு) • திருச்சி மாவட்டத்திற்கு: திரு. எம். ராமலிங்கம், 21-A, கான்வென்ட் ரோடு, திருச்சி 620001. போன்: 28280

## உங்கள் சேமிப்பின் தொடக்கம் யூனிட்டுகளாக இருக்கட்டும்

**20 YEARS OF TRUSTED SERVICE**

Sista's-UTI 242.84 TM E

இது மட்டுமின்றி வேலைக்குச் சேர்த்த மூன்றாவது மாசம் ஊழியரை நிரந்தரமாக்க வேண்டும் என்பது விதி. ஆனால் ஓட்டல்களில் நடப்பது என்ன? மூன்று மாசம் முடிய இரண்டு நாட்கள் இருக்கும் போது வேலையிலிருந்து நீக்கி மறுபடி சேர்த்துக் கொள்வார்கள். ஒரே ஊழியர், ஒரே ஓட்டலில் மூன்று மாதத்திற்கு ஒரு பெயர் என்று பல வருஷங்கள் தொடர்ந்து பல பெயர்களில் (தற்காலிக ஊழியராகவே) வேலை செய்து கொண்டிருப்பார். நிரந்தரமாக்கச் சொல்லி யாரும் கேட்க முடியாது. கேட்டால் சீட்டுக் கிழிந்து விடும்.

* * * * *

மறுபடி சுகாதார விஷயத்துக்கு வரலாமா? ஓட்டல்களில் வழங்கப்படும் உணவுப் பொருட்களின் சுகாதாரத்தை அவ்வப்போது சோதனை செய்து பார்க்க அரசால் நியமிக்கப்பட்டுள்ளவர்களே சானிடரி அல்லது ஹெல்த் இன்ஸ்பெக்டர்கள். ஒவ்வொரு சானிடரி இன்ஸ்பெக்டரும், மாதமொன்றுக்கு 12 சாம்பிள்கள் எடுத்துச் சோதனைக்கு அனுப்ப வேண்டும் என்று விதி. அதாவது ஒரு இன்ஸ்பெக்டர் ஆண்டுக்கு 144 சாம்பிள்கள் சோதனைக்கு அனுப்ப வேண்டும். சென்னை நகரில் மட்டும் 150 இன்ஸ்பெக்டர்கள் இருக்கிறார்கள். ஆக மொத்தம் ஒரு ஆண்டுக்கு மொத்தம் 144 × 150 = 21600 சாம்பிள்கள் எடுக்கப்பட்டு, கிங் இன்ஸ்டிடியூட்டுக்கோ, மாநகராட்சிக்கோ சோதனைக்கு அனுப்பப்பட வேண்டும். சாம்பிள்கள் எடுக்கப்படுகிறதா? எடுக்கப்பட்டால் பரிசோதனையின் முடிவு? அவற்றில் சுகாதாரக் கேடு கண்டுபிடிக்கப்படுகிறதா? கண்டுபிடிக்கப்பட்டால் தண்டனை வழங்கப்படுகிறதா?

இது ஒருபுறமிருக்க, ஒவ்வொரு ஓட்டலிலும் தினசரி நடக்கும் வியாபாரம் எவ்வளவு? இதன் சரியான கணக்கு அரசுக்குக் காட்டப்படுகிறதா?

இந்த மாதிரிக் கேள்விகளை அடுக்கிக் கொண்டே போனால், சம்பந்தப்பட்டவர்களுக்கும், அரசாங்கத்துக்கும் தர்மசங்கடமான நிலை ஏற்படும். அரசாங்கத்துக்கு இவர்களைத் தட்டிக் கேட்க முடியாத நிலை. தட்டிக் கேட்டால் அப்புறம் கட்சிக்கும், தேர்தலுக்கும், சத்தான திட்டத்துக்கும், சொந்தத்துக்கும் இவர்களிடம் நிதி திரட்டுவது எப்படி? ஹோட்டலில் போய்ச் சாப்பிடுகிற நாமோ வாயில்லாப் பூச்சிகள். இல்லையென்றால் ஹோட்டலில் சாப்பிடுவோர் சங்கம் அமைத்து, சுத்தம், சுகாதாரம், கலப்படமற்ற உணவு ஆகியவற்றிற்காகப் போராட மாட்டோமா?

கட்டுரை: **எஸ். சந்திரமௌலி.**

படங்கள்: **யோகா.**


பொருண்டலாங்குக் காலிஸ்தான்
சீக்கியர்களுடன் தொடர்பு...
இந்திராவைக் கொலை செய்த
வர்களுடன் பாரதீய ஜனதா
குலாவல்...


ராமராவ் புல்லையிடம் பிச்சை கேட்டு
கப்பறை ஏந்துகிறார்... ஹெக்டே கட்சியைக்
கவனிக்க ஆட்சியை 'அம்பேல்'
ஆக்குகிறார்!...


வீடு தீப்பற்றி எரியுது!..
உடனே தண்ணி அடியுங்க!
அமிர்தலிங்கம்
இலங்கை
அது அடுத்த வீட்டு விவகாரத்துலெ
தலையிடுவதாகும்!






ஜெயலலிதா



# கல்கி

1985 மார்ச் 10
மலர்: 43 இதழ்: 32
ரக்தாக்ஷிமாசி 27



## பழகிவிட்ட பரிதாபங்கள்!

தமிழகத்தில் மின்வெட்டு என்றதுமே முன்பொரு முறை மின் துறை அமைச்சர் சொன்ன பொன்னான மொழி தான் நினைவு வருகிறது. "மின்வெட்டினால் உற்பத்தி பாதிக்கப்படாது. நமது தொழிலதிபர்கள் பவர் கட்டுக்குப் பழகிவிட்டார்கள். ஜெனரேட்டர்கள் வைத்துச் சமாளித்துவிடுவார்கள்!" என்றார். இந்த முடிவு தவறானது என்பது ஒரு புறம் இருக்க, 'மின்வெட்டு பழகிப் போய்விட்டது' என்று சமாதானம் சொல்வதற்கு ஓர் அமைச்சரும் அரசும் தேவையா என்ற கேள்வி எழுகிறது.

இந்தியக் குடிமகன் மின்வெட்டுக்கு மட்டுமா பழகிவிட்டான்? வேலையில்லாத் திண்டாட்டம், வறுமை, லஞ்ச ஊழல், விலைவாசி உயர்வு போன்ற பலவற்றுக்கும் அவன் பழகிவிட்டான். ஏன், திறமையற்ற ஆட்சியும் கூட அவனுக்குப் பழகித்தான் விட்டது!

முன்னேற்றமடைந்த பல மேல்நாடுகளில் மட்டுமின்றிப் புதிதாக அபிவிருத்தி அடைந்துவரும் பல நாடுகளிலும் கூடப் போய்க் கேட்டுப் பார்த்தால், 'மின்வெட்டா? அப்படியென்றால் என்ன?' என்று திரும்பிக் கேட்பார்கள் மக்கள்! அவ்வாறிருக்கச் சுதந்திரம் பெற்று இத்தனை காலமாகியும் நாம் அனைத்துக்கும் அடிப்படையான மின் உற்பத்தியில் தன்னிறைவு காணாதது விசனத்துக்குரியது. தமிழகத்தின் தேவைக்கேற்பப் போதிய அளவு மின் நிலையங்கள் உருவாகவில்லை என்பது ஒருபுறமிருக்க, உள்ள நிலையங்களும் சரிவர இயங்காததுதான் எத்தனை ஒப்பாரி வைத்தாலும் தீராத பெரும் துக்கம். மின்வெட்டு அதிகரிக்கப்படுவதை அறிவிக்கும் அதே நாளிதழ் அந்தச் செய்தியின் கீழேயே பின்வருமாறு பேசுகிறது:

* கல்பாக்கத்தில் மார்ச் மூன்றாம் தேதி மீண்டும் மின் உற்பத்தி தொடங்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

* எண்ணூரில் 110 மெகாவாட் 'ஸெட்' இம்மாதம் இரண்டாம் வாரத்தில் செயல்படத் துவங்கும் என்று கருதப்படுகிறது.

* தூத்துக்குடியில் ஹைட்ரஜன் ஒழுகியதால் மூடப்பட்ட 'ஸெட்' ஏப்ரல் இறுதிக்கு முன் சீர்ப்படாது என்று நம்பப்படுகிறது.

பருவமழை பொய்த்தாலோ, கர்நாடகம் கருணை காட்டாது போனாலோ நீர்மின் நிலையங்கள் உதவாமல் போகும் என்பது தெரிந்த விஷயம். மற்ற அனல் அல்லது அணுமின் நிலையங்களின் கதியும் இதுவென்றால் தமிழனுக்கு விடிவுகாலம் ஏது? கடும் கோடையில் அவன் உடல் வெந்து புழுங்குவதைக் காட்டிலும் மனம் புழுங்குவது அதிகம். மின்சாரம் இல்லை. எனவே வேலை இல்லை, எனவே வருவாய் இல்லை என்று அவதிப்படுவோர் ஏராளம்.

ஜோக் எழுத்தாளர்கள் வருஷாவருஷம் மின்வெட்டு ஜோக் எழுதிச் சிரிக்க வைப்பார்கள். இப்போது அதுவும் அலுத்துவிட்டது. ஜோக்கோ, கட்டுரையோ, தலையங்கமோ எது எழுதினால்தான் என்ன? நமக்கு மின்வெட்டு பழகிவிட்டதுபோல் அமைச்சர்கள், அதிகாரிகளுக்கு இந்த இடித்துக் காட்டலெல்லாம் பழகிவிட்டது!

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிட்டி பாப்பா—பாரதியார்.

* எஸ். ஏ. கோவிந்தகுமார், நீடாமங்கலம்.
? உங்களைமிகவும் கவர்ந்த நடனம் எது?

! விலைவாசி உயர்வு என்ற தப்புத் தாளங்களுக்கு ஏற்பவும் கணவனின் இல்லைப்பாட்டுக்கு ஏற்பவும் சராசரி குடும்பத்தலைவி எப்படியோ சமாளித்து ஆடுகிற இல் வாழ்க்கை நடனம்.

* சு. குமரேசன், திருவாரூர்.
? ஒருவழியாகத் தமிழகத்தில் அமைச்சரவை அமைச்சாச்சு... இனி...?

! ஹாவ்!

* வண்ணை கணேசன், சென்னை—11.
? இளமர், துடுக்கு, விதவை — எந்த வேடம் சரியாக இருக்கும் ரேவதிக்கு...?

! இளமரா — அய்யய்ய வேண்டாம் ஸார்... இத்தனைச் சின்ன வயதில் வெள்ளைப்புடவை கட்டி வீதி உலா வருவதைப் பார்க்க மனசு தாங்காது... அதனால் அதுவும் வேண்டாம். ப்ளீஸ். இந்த வயதுக்கேற்றாற்போல் ஆட்டம் பாட்டம் வெடுக் பேச்சு... அதான் நம்ம ரேவதி... அதுசரி., இந்த ஸ்டீரியோ டைப் கதா பாத்திரங்கள் தவிர வேற நல்ல கேரக்டர் ரோல் அவருக்குக் கிடைக்கக் கூடாதா...?



* கறுப்பு ஒழிப்பு * எந்த ரோல்...?

* கோ. பொன்ராஜ்குமார், கமுதி...
? டூரிங் தியேட்டரில் சினிமா பார்த்த அனுபவம் உண்டா?

! நானும் அடிக்கடி டூர் போன நாளில் ஒரு சமயம் உள்ளே நுழைந்து ஓர் அனுபவத்துக்காக உட்கார்ந்த போது... தரை மகா ஜனங்கள் அங்கேயே புளிச், அப்புறம் மணலை மேடாக்கி தம்மை உயர்த்திக் கொண்ட காட்சி... பெஞ்சில் மூட்டைப் பூச்சி, டேப் முண்டாசை அவுடா என்ற அதட்டல்; பளபளப்பு குன்றிக் கறுத்துப் போன வெள்ளித்திரை... டிக்கெட் வாங்காமல் உள்ளே நுழைந்து காலை மோப்பம் பிடித்த ஒரு நாய்... அலுத்துப் போய் எழுந்து வெளியே போய்விடலாம் என்று பார்த்த போது ஏக விசில் சத்தம்... திரையெல்லாம் நீலம்... 'அதுவும் அப்படியா, நமக்கு சான்ஸ் அடிக்கிறதா பார்க்கலாம்' என்று நீர் பாட்டுக்கு டூரிங் சினிமாவைத் தேடிக் கிளம்பி விடாதீர்... அடுத்து வந்தது போலீஸ் ரெய்ட்... நான் அசலூர்க்காரன் என்று நிரூபித்துக் கழன்று கொண்டு வருவதற்குள் போதும் போதுமென்றாகிவிட்டது.

* இரா. சி. இரஞ்சன், சென்னை—15.
? கறுப்புப் பணத்தை ஒழித்தே தீருவேன் என ராஜீவ் கூறுகிறாரே?

! "இளம் கன்று அப்படித்தான் துள்ளும். கொஞ்ச நாள் ஆனால் அடங்கிப் போயிடும்" என்று பண முதலைகள் ரொம்பக் கவலைப்படாமல் இருக்கின்றன. அவர்கள் எண்ணம் பொய்த்துப் போக வேண்டுமென்றால் பிரதமர் ரெய்ட் நடத்துவதைத் தீவிரப் படுத்தினால் போதாது. புதிய சட்டங்களைப் பிறப்பித்தாலும் காணாது. கறுப்புப் பண உற்பத்திக்கு உதவு படியாயுள்ள பொருளாதாரக் கொள்கைகளை அடியோடு மாற்ற வேண்டும்.

* அ. ராஜா ரஹ்மான், உத்தமபாளையம்.
? அனுராதா ரமணன் கதைகள் அடிக்கடி படமாவதன் காரணம்?

! அவற்றில் திரைத்தனம் இருப்பதுதான்.

* பி. எல். பரமசிவம், மதுரை.
? மத்தியிலும் மாநிலத்திலும் ஒரே கட்சி ஆட்சியில் இருந்தால் அது யதேச்சாதிகாரம் ஆகிவிடும் என்கிற வாஜ்பாயின் எச்சரிக்கையை ஒப்புக் கொள்கிறீர்களா?

! இல்லை. மத்தியிலும் மாநிலத்திலும் ஒரே கட்சி ஆட்சியில் இருந்தால்தான் ஸ்திரத் தன்மை அதுதான் தேசத்துக்கும் நல்லது என்ற ராஜீவ்காந்தியின் கருத்தையும் நான் ஒப்புக் கொள்ளவில்லை. நல்லாட்சியும் சீரிய ஜனநாயகமும் ஆட்சிக்கு வரும் கட்சியின் சிறந்த கொள்கைகளாலும் அவற்றை அமல் படுத்தும் நேர்மையும் திறமையும் மிக்கத் தலைவர்களாலும் தழைப்பன.



* எச்சரிக்கை

# அஷ்டமி நவமி பார்த்து அமைச்சரவைப் பட்டியல்

* ஆர். அப்துல் சலாம், திருச்சி.

? அங்கே வெயில் எப்படி?

! சாலையோரங்களில் மலை மலையாக வியாபாரத்துக்குக் குவிக்கப்பட்டு வரும் தர்பூஸ்களை மணியோசை எனக் கருதினால் பின்னால் வருகிற யானை மதம் பிடித்ததாய் இல்லாதிருக்க வேண்டுமே என்று கவலையாகவே இருக்கிறது.

* சி. சுப்பு, தேரழுந்தூர்.

? நாட்டுக் கோழிமுட்டை நல்லதா? உயர் ரகக் கோழிமுட்டை நல்லதா?

! தேர்தல் சமயத்திலும் பரீட்சை நேரத்திலும் கேட்கக் கூடிய கேள்வியா இது!

* பி. ரங்கநாயகி, சென்னை.

? ராஜாஜியே கூட ஓய்வு பெற்றதும் ராமாயணம், மகாபாரதம் போன்ற நூல்களைத் தானே எழுதினார் என்ன பிரயோஜனம் என்று அவ்வை கேட்டு விட்டாரே?

! இந்தக் கேள்விக்கான பதிலை அவ்வை நடராஜனே கூறுகிறார்: ''எந்தச் சந்தர்ப்பத்தில் சொன்னேன் என்று பார்க்க வேண்டும். டாக்டர் எம். எஸ். உதயமூர்த்தி விழாவில், 'நிர்வாகம் சரியில்லை, எல்லாம் மோசமாகிவிட்டது' என்று பலர் பேசினார்கள். நான் சொன்னது: 'சுதந்திரத்துக்குப்பின் பெருந்தலைவர்கள் இருந்தார்கள். அவர்கள் அடுத்துவரும் தலைமைக்கு வழிகாட்டும் விதம் தமது அனுபவங்களை வைத்துத் தேசத்தை நிர்வகிப்பது எப்படி என்று நூல்கள் எழுதியிருந்தால் பயனுள்ளதாய் இருந்திருக்கும்' என்று சொல்லி ராஜாஜியையும் குறிப்பிட்டேன்...''

இனி தராசு: அவ்வை நடராஜனின் ஆதங்கத்தை நமக்குப் புரிந்து கொள்ள முடிகிறது. ஆனால் நாட்டைச் சிறந்த முறையில் நிர்வகிக்கத் திருக்குறள், ராமாயணம், பாரதத்தை விடச் சிறந்த வழிகாட்டி நூல்கள் இருக்க முடியாது என்று கருதியவர் ராஜாஜி. எனவே இவற்றை எழுதினார். இந்த பலமான அஸ்திவாரம் போதாதென்று அவ்வப்போது சுயராஜ்யாவில் நாட்டு நடப்புக்களை ஆங்கிலத்தில் விமர்சித்தும் வந்தார். அவை ''சத்யமேவஜெயதே'' என்று நாலு தொகுதிகளாக வெளிவந்தன. இன்றைய அரசியல்வாதிகள் எந்தப் பிரச்னைக்கும் அதில் விடை காணலாம். அகரவரிசைப்படி, அட்டவணை இருப்பதால் எந்தப் பிரச்னை எந்தப் பக்கத்தில் என்று நிமிஷ நேரத்தில் விடை கண்டுபிடிக்கலாம். ஆகவே பிரச்னைகளுக்குத் தீர்வுகள் இல்லாமலில்லை. அவற்றை ஏற்க மனம் இல்லாதது தான் குறை. மனம் வராததற்குக் காரணம் சுயநலம் வேரூன்றியதும் அறிவாற்றல் மட்டாக இருப்பதும்.

* பி. டி. சண்முகராஜ், பல்லாவரம்.

? அரசியலில் நேர்மையானவர் யார்?

! அமரானி விட்டு எல்லோருமேதான்!

* எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

? புகழ் மனிதனை பலப்படுத்துகிறதா? பலவீனப் படுத்துகிறதா?

! போதையாகிறபோது பலவீனப்படுத்துகிறது. பாதிக்க விடாத போது பலமாகிறது.

* ஜோ. பன்னீர் செல்வன், காரைக்குடி.*

? அஷ்டமி நவமி பார்த்து அமைச்சரவைப் பட்டியல் வெளியிடுபவர்களும் தங்களைப் பெரியார் வழி வந்தவர்கள் என்று கூறிக் கொள்கின்றனரே...?

! வந்தவர்கள் என்று கடந்த காலத்தில் தானே கூறுகிறார்கள். சென்று கொண்டிருப்பதாக நிகழ்காலத்தில் அல்லவே!



* எந்த சந்தர்ப்பம்...?



* நிரைத்தனம்

* மஞ்சுதேவன், சென்னை.

? தொடர்கதையை வாராவாரம் படிப்பது, முடிந்த பிறகு பைண்டு செய்து ஒரேயடியாகப் படிப்பது — ஒப்பிடுக.

! காலையில் ஆபீஸுக்கு நேரமாகிவிட்டது என்ற நினைப்போடு கொதிக்கக் கொதிக்கத் தட்டில் விழும் சோற்றை ஓரத்திலிருந்து சிறிது சிறிதாகப் பரக்கப் பரக்க அள்ளிப் போட்டுக் கொண்டு ஓடுகிறோம். மாலை திரும்பிய பிறகு அதே சாப்பாட்டைத்தான் மிதமான சூட்டில் நிதானமாகச் சாப்பிடுகிறோம். காலையில் வயிறு நிறையும்; மாலையில் ருசி தெரியும்! வாராவாரம் ஒரு பரபரப்புடன் படித்து முடிக்கும் தொடர்கதைகளை பைண்டு செய்து இரண்டாவது தடவை படிக்கும் போதுதான் இலக்கியச்சுவை புலனாகும்.

* ரூ. 10 பரிசு பெறுபவர்:
ஜோ. பன்னீர்செல்வன்,
மாரியம்மன் கோவில் தெரு,
கணேசபுரம், காரைக்குடி—623 001.

## நீங்கள் கேட்டவை - தராசு





நாராயணமேனன், வாக், ஆர்.வி.

முதல் முறையாகத் தலைநகருக்கு வெளியே — சென்னையில் — சங்கீத நாடக அகாடமி, 1984—ஆம் ஆண்டுக்கான விருதுகளைக் கலைஞர்கள் பலருக்கு வழங்கியது. அத்துடன் நில்லாது, கலைநிகழ்ச்சிகளையும் சென்னையிலேயே நடத்தியது. இந்த யோசனை வெளியான உடனே சென்னை மியூஸிக் அகாடமி தலைவர் திரு. டி. டி. வாசு, "இதோ நாங்கள் ஒத்துழைக்கத் தயார். அகாதமி அரங்கில் வைத்துக் கொள்ளலாம்" என்று கூறிவிட்டார். இருநூறுக்கு மேற்பட்ட கலைஞர்கள் அனைத்திந்தியாவிலிருந்தும் வந்திருந்து நட்சத்திர ஓட்டல்களில் தங்கி கலைத்திறனைக் காட்டினார்கள். மக்களின் வரிப்பணம் இதற்காக ஏகமாகச் செலவாகி இருக்கும்தான். கலைவளர்ச்சி, ஆதரவு என்று பார்க்கும்போது இதை மக்கள் பொருட்படுத்த மாட்டார்கள். ஆனால் நிகழ்ச்சிகள் தரமானவை என்றாலும் அவை நடத்தப்பட்ட விதம் காரணமாக இந்தச் செலவெல்லாம் பெரும்பாலும் வியர்த்தமாகிப் போனதோ என்ற எண்ணம் எழத்தான் செய்கிறது.

சங்கீத நாடக அகாதமியின் தலைவர் வி.கே. நாராயணமேனனின் வரவேற்புரையிலும் சரி, குடியரசுத் துணைத்தலைவர் ஆர். வெங்கட்ராமன் தலைமையுரையிலும் சரி, புதிதாக ஏதானும் இருக்கவேண்டுமே? இது போன்ற மேடைகளில் வழக்கமாகக் கேட்கும் பல்லவிகள்தாம். மரபுகளை மீறாமல் நமது பழங்கலைகளின் பெருமையையும் தூய்மையையும் பாதுகாத்துச் சம்பிரதாயக் கட்டுப்பாடுகளுக்கு உள்ளடங்கியே புதுமைகளைப் புகுத்த வேண்டும்' என்பது ஒன்று. பாரதத்தின் பல்வேறு பட்ட கலை வளம் பிரமிக்க வைப்பது, வேற்றுமையில் ஒற்றுமை காணச் செய்வது என்பது மற்றொன்று.

கதக் நடனக் கலைஞர் துர்காலால், பரத நாட்டியக் கலைஞர் சுதாராணி ரகுபதி, நாடக நடிகர் உத்ரா தவிர விருது பெற்றோர்கள் எல்லோருமே வயதானவர்கள் என்றாலும், ரொம்ப வயதானவர்கள் இரண்டு பேர். — திருமுருக கிருபானந்த வாரியார், ராஜா ராம் பாவ்கதம். பின்னவரின் வயது கொஞ்சநஞ்சமல்ல. — 97! இவர் பிறந்த வருடத்தை அறிவித்ததும் எழுந்ததே ஒரு கைத்தட்டல்!

இவர்களை ஏதோ அசுவமேதக் குதிரைகள் மாதிரி அந்தப் பக்கம் இந்தப் பக்கம் திரும்ப விடாமல் மேடைக்குக் கூட்டிக் கொண்டு போய், கழுத்துக்கு மாலை வாங்கிக்கொடுத்து, அப்படியே அலுங்காமல் நலுங்காமல், கட்டிப்பிடிக்காத குறையாய் அணைத்துக் கீழே

# பழைய பல்லவிகளும் புதிய



• வாரியாருக்கு விருது



• ஹரிபிரசாத் சௌராஸியா



• 97 வயதான
ர்ஜாராம் பாங்கதம்



• துர்காலால் —கதக் நடனம்.

# அனுபவங்களும்

## சங்கீத நாடக அகாடமி கலைவிழா

இறக்கிவிட்டாரே. அவருக்கு ஒரு தாமிரப் பத்ரா இல்லாவிட்டாலும் குறைந்தபட்சம் ஓர் அலுமினியப் பாத்ராவாவது கொடுக்கலாம். அப்படி ஒரு போலி பவ்யம். நல்லவேளை, நிற்க இயலாத வாரியாருக்கு ஆர். வி. இருக் கைக்கொடுத்தாரோ, பிழைத்தாரோ!

பெண் கலைஞர்களுக்கு மாலை போட சங் கீத நாடக அகாடமியில் பெண்மணிகள் யாரும் இல்லையா என்ன? மலர்ச் செண்டு கொடுத்தாலும் பரவாயில்லை. மாலையைக் கையிலா கொடுப்பார்கள்? மரியாதையா அது?

பசுஞ்செடிகளுடன் மேடை அலங்காரம்; மெலிதான ஒளியமைப்பு எல்லாம் தில்லிப் பாணியில். வழக்கமான கறுப்பு அல்லது கருநீலப் படுதாப் பின்னணிக்குமேல் வெள் ளைத்துணி, சரவிளக்கு, பாவை விளக்குகள் எல்லாம் அழகாய்த்தான் இருந்தன. ஆனல் நடன நிகழ்ச்சிகளின் போது கரிய நிழல் கள் பூதாகாரமாய்க் கூடவே ஆடியபோது தான் கறுப்புத் துணிப் படுதா, கறுப்பு ஸைட் ஸ்கிரீன்களின் மகிமை புரிந்தது.

'நிகழ்ச்சிகளின் போது மேடையில் மட்டும் விளக்கைப் போட்டு மற்றபடி அரங்கை இருட்டடித்ததற்கு என்ன காரணம் இருக்க முடியும்? சந்தானம் போன்ற நமது பாடகர்க ளுக்கு எதிரே இருக்கும் ரசிகர்கள் தெரிந் தால்தானே, அவர்கள் அனுபவிப்பதை உண ரும் போதுதானே உற்சாகம் பெருகும்? என்று யோசித்ததில் ஒன்று புலனாயிற்று. பல நாற் காலிகள் காலியாகவே இருந்ததுதான் இருட்டடிப்புக்குக் காரணமோ? யாருக்காக இவையெல்லாம் நடத்தப்படுகின்றனவோ, அந்த ரசிகர்களைச் சுதந்திரமாய் அதிக அள வில் வரவொட்டாமல் தடுத்தது எத்தகைய புத்திசாலித்தனமோ? பஞ்சாபிப் பாடகி சுரிந்தர் கௌர், நிகழ்ச்சியை ஆரம்பிக்கும் முன் கேட்டார்: "டிக்கெட்டுகள் விநியோகத் தில் ஏதும் குளறுபடியோ? ஏன் இத்தனை இடங்கள் காலி?" உஷா உதுப், கிஷோர் குமார் நிகழ்ச்சிகள்மாதிரி, சுரிந்தரின் பாடல் களுக்கு, அவர் கேட்டுக் கொண்டதின்

• நடிப்பு — உத்ரா பாவுகர் (ஹிந்தி).



பேரில், சபையோர் கூடச் சேர்ந்து தாளம் போட்டது கும்மாளமாயிருந்தது!

விளக்கை அணைத்தது குறித்து இன்னொரு வார்த்தை: அமர்க்களமாக ஜுகல்பந்தி முடிந்தவுடன், உமையாள்புரம் சிவராமனை வாஞ்சையுடன் அணைத்துக் கொண்டாரே தபலாக் கலைஞர் கிஷன் மகராஜ். அப்போது தானா விளக்கை அணைத்துத் திரையையும் தொங்க விட வேண்டும்? நல்ல விஷயம் ஒன்றும் கண்ணில் பட்டுவிடக் கூடாது என் பதில் — அடடா, என்ன கர்ம சிரத்தை!

மகாராஜபுரம் சந்தானம் கச்சேரியைக் கடைசி ஐட்டமாக ஒருநாள் வைத்து, பலரும் ஒன்பது மணிக்கே எழுந்து போக வைத்த 'பெருமை'யை இவர்களுக்குக் கொடுக்க வேண்டும். சுதாராணி ரகுபதிக்கு ஒருநாள் முழு மாலை நிகழ்ச்சியைக் கொடுக்கலாம் என்றால் கேட்கக் கிடைக்குமா' என்று பலர் ஏங்கும் மகாராஜபுரம் சந்தானம் கச்சேரியை மட்டும் நான்கு நிகழ்ச்சிகளில் ஒரு கடைசிப் பகுதி நிகழ்ச்சியாகக் கொடுக்கலாமா?

நிகழ்ச்சிகள் பற்றி ஒன்றும் சொல்லவில்லையே என்பீர்கள். ஒவ்வொருவரும் அவரவர் துறையில் ஜாம்பவான்கள். நிகழ்ச்சிகளை அவர்களுக்கே உரிய பாணியில் வெகு அழகாக அளித்தார்கள். அவர்களைப் பாராட்டித்தான் விருதும் வெகுமதியும் கொடுத்துவிட்டார்களே! அவர்கள் பெற்ற புகழுக்கு அவர்கள் தகுதியானவர்களே என்று நிரூபித்தார்கள். சௌராஸியா குழலூதி சொக்க வைத்தார். உமையாள்புரம் சிவராமனும் தபலா கலைஞர் கிஷன் மகராஜும், இணைந்து அளித்த ஜுகல்பந்தி படு அமர்க்களம். மகராஜனின் ஆற்றலெல்லாம் வெளிப்படும் அளவில் அற்புதமாக வளர்த்துக் கொண்டு போனார் சிவராமன். அதற்கு முன்பாக கிஷன் மகராஜ் தபலா எப்படிப் பேசுகிறது, பாடுகிறது என்று டெமான்ஸ்ட்ரேஷன் செய்து காட்டியதும் ஒரு அரிய அனுபவம்தான். 'ஜஸ்மா ஓடன்' என்ற நேஷனல் ஸ்கூல் ஆஃப் டிராமா நாடகத்தை வர்ணிக்க 'ஸுப்பர்ப்' என்ற ஆங்கிலப் பதத்துக்கு நிகரான தமிழ்ப்பதம் இருந்தால் போட்டுக் கொள்ளுங்கள். நடிப்பு, பாட்டு, வசனம், வண்ணம், ஒளி, ஒலி, எல்லாவற்றிலும் அசத்திவிடுகிற நாடகம். இதை எழுதும்போது நிகழ்ச்சிகள் தொடர்ந்து நடந்து கொண்டிருக்கின்றன. ஒவ்வொன்றும் ஒவ்வொரு விதத்தில் ரசிகர்களை மகிழ்வித்தும் வருகின்றன.

நிகழ்ச்சிகள் அளித்த மனநிறைவு நிர்வாகக் குறைபாடுகளை மன்னிக்க வைத்ததென்னவோ உண்மை! எனவே சங்கீத நாடக அகாடமிக்கு நன்றி கூறிவிட வேண்டியதுதான்.

—நமது நிருபர்.

---




# பிலிப்ஸ்

# தோற்றத்தில் எல்லா பல்புகளும் ஒன்றுதான்

PHILIPS
argenta

# ஆனல், பிலிப்ஸ் எனும்போது தரம் பளிச்சிடும்

தோற்றத்தைக் கண்டு பொருளை நிர்ணயிக்கலாமா? தரத்தினைப் பற்றியும்
நம்பகம் வேண்டும். பிலிப்ஸ் பல்புகளையே வாங்கிட உறுதிகொள்வீர்.
அதன்மூலம், நீடித்திருக்கும் பளிச்சிடும் வெளிச்சம் உங்களுக்குக்
கிடைக்கிறது; உங்கள் பணத்திற்குத் தகுந்த மதிப்பும்கூட.
பிலிப்ஸ் பல்புகள். தரம்பற்றித் தெரிந்தவர்கள்,
தோற்றத்தால் மயங்கலாமா?

PEI-1 284

பிலிப்ஸ் - ஐம்பது ஆண்டுகளுக்கும் மேலாக இந்திய வீடுதோறும் விளங்கும் நம்பகமான பெயர்

## 2

ஆமாம்.

பதினெட்டு வருஷங்கள்.

முழுதாய்ப் பதினெட்டு வருஷங்கள் முன்னால் ஒருநாள் பகல் இந்நேரத்திற்கு ராஜத்தை வீட்டைவிட்டு வெளியே துரத்தினான் பலராமன்.

கையில் நான்கு வயது மாலா.

வயிற்றில் இரண்டு மாதக் கருவாய் சிவா.

இந்தப் பதினெட்டு வருஷங்கள் எவ்வளவு சோகமாய்ப் போயின? எவ்வளவு வேதனை, எவ்வளவு பிரச் னை, எவ்வளவு துயரம்?

எல்லாவற்றிற்கும் இந்தப் பலராமன் தானே காரணம்?

''அம்மா; நம்ம அப்பா எங்கேம்மா?... எல்லாரும் கேக்கறும்மா...?'' என்று மாலாவும், சிவாவும் கேட்கிறபோதெல்லாம் பதில் சொல்லாமல் வெறித்துப் பார்க்க வைத்தது இந்தப்பலராமன் தானே?

இப்போது எதற்கு வந்திருக்கிறான்?

ஒருமாதிரி இந்த வாழ்க்கைக்குப் பழகிப் போய், இந்த ரீதியிலேயே எதிர்காலத்தைத் திட்டமிட்டுக் கொண்டிருக்கும் போது, எதற்காக, நாடி நரம்பெல்லாம் தளர்ந்து போய் வந்திருக்கிறான்?

மனம் தவித்துப் பொங்கிற்று.

சில நிமிடங்கள் கழிந்தன.

சமையலறை நிலைப்படியில் சாய்ந்து நின்று கொண்டிருந்த ராஜம் நிலைக்கு வந்தாள்.

பிள்ளையையும், பெண்ணையும் ஆழமாய்ப் பார்த்தாள்.

''பாதிச் சாப்பாட்டில் ஏன் எழுந்து வந்தீர்கள் ரெண்டு பேரும்?... போய்ச் சாப்பிடுங்கோ... ஊம்...''

குரலின் மிடுக்கு இருவரையும் பணிய வைத்தது.

மெதுவாய்ப் பலராமன் அருகே வந்தாள்.

ஒரு நிமிடம் கனிப்பாய்ப் பார்த்தாள்.

''கை, கால் அலம்பிண்டு சாப்பிட வாங்கோ... கொல்லைக் கிணற்றடியிலே தொட்டியிலே ஜலம் இருக்கு... சமையலறை வழியாப் போகணும்...''

அதற்காகவே காத்துக் கொண்டிருந்தது மாதிரி மாலாவையும், சிவாவையும் பார்த்துக்கொண்டே சாப்பிடத் தயாரானான் பலராமன்.

சமையலறையில் பலகையிட்டுப் பரிமாறத் தொடங்கினாள் ராஜம்.

மிகக் கடினமான மௌனம் வீடெல்லாம் சூழ்ந்தது.

''அம்மா... நான் ஆபீஸ் போகட்டுமா, இல்லே...''

தயங்கிய மாலாவைப் பார்த்தாள்.

''ஆடிட் இருக்குன்னியே... நீ கௌம்பு... சிவா... நீயும் காலேஜுக்குப் புறப்படு... வீவு கீவுன்னு பொழுதை வீண் பண்ணாதே...''

தலையைக் குனிந்து கொண்டு இருவரும் வெளியேறினார்கள்.

அனுபவித்துச் சாப்பிட்டுக் கொண்டிருந்தான் பலராமன்.

அன்று மாலாவுக்கு அலுவலகத்தில் வேலையே ஓடவில்லை. நெஞ்சு தவியாய்த் தவித்தது.

பாடத்தில் எள்ளளவும் கவனம் செலுத்த முடியாமல் வயிறு கொதிக்கக் கொதிக்க வகுப்பில் அமைதியில்லாமல் உட்கார்ந்திருந்தான் சிவா.

ரிஷபன்



# புதிதாய்ப் பிறந்தாள்

லாபரட்டரியில் வழக்கத்திற்கு விரோதமாய்த் தவறுகள் செய்தான்.

"ஹாய் சிவா... வாட் ஹேப்பண்ட் டு யூ? நாட் டூயிங் வெல்...?" என்று டையான்ஸ் டிரெட்டர் தோளைத் தொட்டுக் கேட்ட போதுகூட அவனால் சமாளித்துக் கொள்ள முடியவில்லை.

அம்மா பரிமாறுவதையும், அப்பா என்ற அந்த மனிதர் சாப்பிடுவதையும் அவனால் தாங்கவே முடியவில்லை.

ராமச்சந்திரபுரம் கிராமத்தின் ஏழைச் சிவன் கோயிலின் மிக ஏழைக் குருக்கள் தான் ராஜத்தின் அப்பா.

கோயிலுக்கு யாராவது வரமாட்டார்களா என்று ஏங்கி ஏங்கியே அவர் காலம் போயிற்று. 'ஐயோ பாவம், சிவன் சாப்பிட்டு விட்டுப் போகட்டும்' என்று கோயில் நிலத்தைக் குத்தகைக்கு எடுத்த மிராசுதார் ஏதாவது கொடுத்தால் உண்டு. இல்லாவிட்டால் சிவனும், அவரோடு சேர்ந்து குருக்கள் வீட்டில் மூன்று ஜீவன்களும் பட்டினி.






இப்படியேதான் காலம் போயிற்று.

கொஞ்சம் நஞ்சம் தெரிந்த ஜோதிட அறிவை வைத்தும், மாந்திரீகத்தில் அறிந்து கொண்டதை வைத்துக் கொண்டும் நாட்களை ஓட்டினார் குருக்கள்.

ராஜத்திற்கு ஒன்பது வயதான போது அந்த வருமானமும் போயிற்று.

ஒருநாள் இரவு அர்த்தஜாம பூஜை என்று கையில் கிடைத்த அரளிப் பூக்களைச் சிவனுக்குச் சாத்திவிட்டு, லொட லொட வென்ற அதன் பெரிய கதவுகளைப் பூட்டிக் கொண்டு இரவில் வீட்டிற்கு வரும் வழியில் காலில் ஏதோ தட்டுப்பட, காலை உதறுவதற்குள் 'சுரீல், சுரீல்' என்று காலில் ஏதோ பாய, சில நிமிடங்களில் விர்ரென்று தலை முதல் கால்வரை ஏதோ உடலில் பாய்ந்து, வாயில் நுரை கொப்பளிக்கச் சாலையிலேயே விழுந்தார். அப்புறம் வழியில் பார்த்தவர்கள் தூக்கிக் கொண்டு வந்தார்கள். தூங்கிக் கொண்டிருந்த நாட்டு வைத்தியரை யாரோ அழைத்துக் கொண்டு வந்தார்கள். அரிக்கேன் லாந்தரால் காலோடு தலையாய்ப் பார்த்து, நாடி பார்த்து, பின்னர் உதட்டைப் பிதுக்கினார் வைத்தியர்.

''உடம்பெல்லாம் நீலம் பாய்ஞ்சிருச்சே... சர்ப்பம் தீண்டியிருக்குது...''

காரணம் சரியாய்ப் புரியாமல், எல்லாரும் அழுவது கண்டு தானும் அழுதாள் ராஜம்.

அன்றைக்கு மறுநாள் சமையல் கரண்டியைக் கையில் பிடித்தாள் ராஜத்தின் அம்மா.

மற்ற வீடுகளின் சமையலறையில் உழலத் தொடங்கினாள்.

தானும் தன் பெண்ணும் சாப்பிட மற்ற வீடுகளில் சமைக்கத் தொடங்கினாள்.

நல்லவேளையாகப் பரம்பரையாய் வந்த அந்தப் பழைய ஓட்டுவீடு, அவர்கள் பட்டினியாய்ப் படுத்துக் கொண்டாலும் பாதுகாவலாய்த் தூங்க இடமளித்தது.

சின்ன கிராமம்.

அதிகம் பரபரப்பில்லாத வாழ்க்கை.

அங்கே சமையல் வேலைக்கு என்ன பெரிய வாய்ப்பு வந்துவிடப் போகிறது?

பக்கத்து டவுனில் இருக்கும் சில பெரிய மனிதர்கள் வீட்டுக்குச் சமையல் செய்யப் போவாள் ராஜத்தின் அம்மா. காலையில் பஸ்ஸில் போய், மாலையில் துவண்டுபோய் வருவாள். பஸ் சார்ஜ் போக மீதியுள்ள பணம் இருவருக்கும் போதுமானதாக இருந்தது.

நேரம் இருக்கும் போது அப்பளம் இட்டு டவுன் கடைகளில் விற்றுக் கொடுக்க ஏற்பாடு செய்தாள்.

காலையில் வீட்டிலேயே இட்லி விற்பனையை ராஜம் கவனித்துக் கொண்டாள்.

நேர்மையாக, நாணயமாக வாழ வேண்டும் என்று வைராக்கியமாய் முயன்றால் வாழவா முடியாது? உழைக்காமல் சாப்பிட வேண்டும் என்று எண்ணுகிறபோதுதானே பிரச்சினைகள் எழுகின்றன?

ராஜத்தின் அம்மாவுக்கு உழைக்க மனம் இருந்தது.

பெண்ணுக்குச் சமையலில் நுணுக்கங்களைச் சொல்லிக் கொடுத்தாள். இயல்பிலேயே 'கைமணம்' என்று சொல்வார்களே அது கைவரப் பெற்ற ராஜத்திற்கு, தாயின் ஆலோசனைகளும், நுட்பங்களும் துணை புரிந்தன.

நகர மறுத்த நாட்கள், மெதுவாய் நடக்கத் தொடங்கி, பின்னர் ஓடத் தொடங்கின.

'சிவன் கோயில் குருக்கள் பொண்ணு சமைச்சா, தனி ருசிதான்...' 'ராஜத்தோட அம்மா இட்லி வாக்கறது எவ்வளவு மிருதுவா இருக்கு. நீயுந்தான் வார்க்கறே, கல்லுக் கல்லா. வேகமாக் கடிச்சாப் பல்லே ஒடைஞ்சுடும் போல இருக்கு...''

''டேய்... குருக்கள் வீட்டுக்குப் போய் நாலு அப்பளம் வாங்கிண்டு வா...''

''...மத்தியானம் மூணுமணிக்கு எங்க கௌரியைப் பெண் பார்க்க வருகிறார்கள்.. சொஜ்ஜி, பஜ்ஜி நீங்கதான் பண்ணித்தரணும்...

விதவிதமாய் விமரிசனங்கள். வாழ்த்த மனத்திடத்துடன், ராஜத்தை வளர்த்தாள்.

ராஜம் வளர்ந்தாள்.

காலம் ஜாலம் செய்யலாயிற்று.

அதுவரை கவலையில்லாமல் இருந்தவளுக்கு, ராஜத்தின் வளர்ச்சி கவலையளிக்கலாயிற்று.

ஆண் துணையின் பலத்தை அதுவரை அவசியம் என்று நினைக்காதவள், தேட வேண்டியதாயிற்று.

இந்தப் பெண்ணை நல்லபடியாய்க் கல்யாணம் செய்து கொடுக்க வேண்டுமே என்ற பிரர்ண்டல் மனதைக் குடையலாயிற்று.

தனியே வீட்டில் விட்டுவிட்டு டவுனுக்குச் சென்று கொண்டிருந்தவள் பெண்ணையும் அழைத்துக் கொண்டு போக ஆரம்பித்தாள்.

''யாரு, பொண்ணா?... நிருநிருன்னு வளர்ந்துட்டாளே? சீக்கிரம் கல்யாணம் பண்ணிக் கொடுத்துடு... காலம் கெட்டுக் கெடக்கு... நீயும் புருஷத் தொணை இல்லாதவ...''

வாழ்க்கையில் இலவசமாகக் கிடைப்பவை ஆலோசனைகள்தாம். ராஜத்தின் அம்மாவிற்கு நிறையக் கிடைத்தன.

''நல்ல மாப்பிள்ளையாகக் கிடைக்க வேண்டுமே'' என்ற கவலை நாளெல்லாம் நெஞ்சக்குள் குடைய, யாராவது பையன்கள் தன்

தகுதிக்கு ஏற்றவாறு கிடைக்கமாட்டார்களா என்று தேடித் துழாவிய போது, அவளுக்கு அறிமுகமானவன்தான் பலராமன்.

டவுனில் வேலை பார்த்துவிட்டு, பஸ் ஸ்டாண்டுக்குப் போகிற வழியில் இருந்த ஹோட்டலில் இருவருமாய்க் காபி சாப்பிட நுழைந்த வேளை அவர்கள் வாழ்க்கையில் திருப்புமுனை.

"என்ன வேண்டும்?" என்று காதில் பென்சிலோடு இருவரையும், குறிப்பாய் ராஜத்தையும் பலராமன் பார்த்த வேளையில் வான மண்டலத்திலிருந்து ஏதோ ஒரு கிரகம் பூரணமாய் ராஜத்தை நேர்பார்வையாய்ப் பார்த்திருக்க வேண்டும்.

அப்போது அறிமுகமானவன் தான் பலராமன்.

சிவப்பாய், சுருட்டைத் தலைமுடியுடன், வாய் நிறையப் பேச்சுக்களுமாய் அறிமுகமான பலராமனை ராஜத்தின் அம்மாவிற்குப் பிடித்துப் போயிற்று.

ராஜத்தின் அம்மாவின் இயலாமைக்குப் பலராமனைப் பிடித்தது.

பல்ராமன் பார்வைக்கு ராஜத்தின் நடப்பு பிடித்தது.

அப்புறம் டவுனுக்கு வருகிற போதெல்லாம் பலராமனைச் சந்திப்பது என்று வளர்ந்து, பலராமன், 'பல்ராமா' என்று அழைக்கும் அளவுக்கு நெருங்கி, வாரா வாரம் ஞாயிற்றுக்கிழமை ஹோட்டல் விடுமுறை தினங்களில் பலராமன், அவர்கள் வீட்டுக்கு முறை வைத்துக் கொண்டு, வருவது வரை இழைந்து அப்புறம் 'பல்ராமன்' இல்லாமல் வீட்டில் எதுவுமே நடப்பதில்லை என்கிற அளவுக்கு நெருக்கமாகிப் போயிற்று.

ஆண் துணை இல்லாமல் உள்ளூர அச்சத்துடனும், வெளியே போலி தைரியத்துடனும் நாட்களைக் கழித்த ராஜத்தின் அம்மாவிற்கு, பலராமனின் பரிச்சயம் ஒரு தைரியமாகிப் போயிற்று.

ராஜத்திற்கும் பலராமனைப் பிடிக்கிறது என்பதை யூகித்துக் கொண்ட அவளது அம்மா, அக்கம்பக்கத்தில் இருப்பவர்கள் பேச்சு, திசைமாறுமுன், ஒரு நாளில் ராஜத்தைப் பலராமனுக்கு மணம் முடித்து வைத்தாள்.

பலராமன் வீட்டிற்கு டவுனில் குடித்தனம் போனாள் ராஜம்.

**(தொடரும்)**

### அருள்வாக்கு

மெட்ராஸுக்கு வந்ததில் நானும் ஒரு பாடம் கற்றுக் கொண்டேன். மௌனத்தால் கிடைக்கிற சாந்த சௌக்கியம் சாஸ்வதமாக நிலைத்து நிற்பது. அதாவது எத்தனை கஷ்டத்துக்கு நடுவிலும் கஷ்டம் தெரியாமல் ஆனந்தமாக இருக்கும்படி பண்ணுவது என்று சொல்கிறார்கள். கஷ்டமே இல்லாமலிருக்க வேண்டுமென்றால் முடியாது. கஷ்டம் இருக்கத்தான் வேண்டும். அப்போதுதான் கர்மா ஒழியும். ஆனாலும் அது கஷ்டமாகத் தெரியக் கூடாது. ஒரே ஒரு அயிட்டத்திலாவது இதை நாம் தெரிந்து கொண்டதற்கு மெட்ராஸ் வாஸம் ஸஹாயம் பண்ணியிருக்கிறது. இங்கே பூஜை பார்க்க வேண்டுமென்பதற்காக நீங்களெல்லாம் பக்தியோடு கும்பலில் நெரிந்து கஷ்டப்பட்டுக் கொண்டு மணிக்கணக்காக் காத்துக் கொண்டிருக்கிறீர்கள். பூஜை பார்க்கிறபோது இத்தனை கஷ்டமும் மறந்து உத்ஸாஹம் உண்டாகிவிடுகிறது. அந்த உணர்ச்சி வேகத்தில் அவரவரும் பாட்டு, பாராயணம், பஜனை என்று ஆனந்தமாக ஆரம்பித்துவிடுகிறீர்கள். மற்றவர்களுக்கும் இது நல்லதுதானே என்ற நல்லெண்ணத்தில்தான் இப்படிச் செய்கிறீர்கள். ஆனால் இதனாலேயே ரொம்பவும் சப்தமும் **distraction**-ம் (கவனச்சிதறலும்) ஏற்பட்டு விடுகிறது என்று சில பேருக்குத் தோன்றவே, **Silence please** என்று அட்டைகள் எழுதி மாட்ட ஆரம்பித்தார்கள். நான் அவற்றைக் கழற்றிவிடச் சொன்னேன். ஏன்? இப்போதுதான் நமக்கு ஒரு பாடம் படித்துப் பாஸ் பண்ணச் சந்தர்ப்பம் வந்திருக்கிறது. இத்தனை சப்தத்துக்கு நடுவில் அதைக் கவனிக்காமல் நாம் பூஜை பண்ண முடிகிறதா என்று 'டெஸ்ட்' வந்திருக்கிறது. இதை நழுவ விடக் கூடாது என்று நினைத்துத்தான் கழற்றச் சொன்னேன். ஈச்வரானுக்ரஹத்தில் இப்போது எத்தனை சப்தமிருந்தாலும் நான் பாட்டுக்குப் பூஜை பண்ணிக் கொண்டிருக்கப் பழகிவிட்டேன்.

அதனால் இன்று மௌனத்தைப் பற்றிப் பேசினது எனக்குச் சௌகரியமாகப் பூஜையின் போது நீங்கள் பேசாமலிருக்கும்படி பண்ண வேண்டும் என்ற உத்தேசத்திலல்ல. உங்களுக்கே அதன் பிரயோஜனம் தெரிய வேண்டுமென்றுதான் சொன்னேன். இத்தனை நாள் உங்கள் இஷ்டப்படி பாடி, பேசி பஜனை செய்தாகி விட்டபடியால் இப்போது உங்களைப் பூஜையின் போது மௌனமாக, மானஸிகமாகப் பிரார்த்தனை பண்ணிக் கொள்ளச் சொல்வதில் நியாயமிருக்கிறதென்று தோன்றியது. சும்மாயிருக்கும் ஸுகம் லவலேசமாவது உங்களுக்கெல்லாம் தெரிய வேண்டும் என்ற ஆசையில் சொன்னேன்.

**—ஜகத்குரு ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**



ராஜஸ்தானின் கிராமம் ஒன்றில் வசித்துவரும் முன்னு, தில்லிக்குப் போகிறோம் என்று ஒரே உற்சாகமாகத் துள்ளிக் குதித்துக் கொண்டிருந்தான். கண் பார்வையற்ற ஏழு வயது முன்னுவை அவனுடைய தந்தை பகதூர், வைத்தியம் செய்வதற்காகத் தில்லியிலுள்ள 'பெரிய' கண் ஆஸ்பத்திரிக்கு அழைத்துச் செல்கிறார். பிறந்து ஒன்றிரண்டு ஆண்டுகள் வரை சுமாராகக் கண் பார்வை பெற்றிருந்த முன்னுவுக்கு, நாளாக ஆகப் பார்வை மங்கலாகப் போய், இப்பொழுது அறவே கண் தெரியாமல் போய்விட்டது.

முன்னுவைப் பரிசோதித்த பக்கத்து டவுன் ஆஸ்பத்திரியைச் சேர்ந்த டாக்டர்கள், தங்களால் ஒன்றும் செய்ய முடியாது என்று சொல்லி, தில்லியிலுள்ள பெரிய ஆஸ்பத்திரியில் வேண்டுமானால் காண்பித்துப் பார்க்கலாம் என்று ஆலோசனை கூறியிருந்தார்கள். எட்டு வகுப்பு வரை படித்துவிட்டு டவுனின் ஜவுளிக்கடை ஒன்றில் வேலை பார்க்கும் பகதூருக்கு, தன் பிள்ளை தன்னைப் போல் கஷ்டப்படாமல் பெரிய படிப்பெல்லாம் படித்து ஆபீஸில் வேலை பார்க்க வேண்டும் என்று கொள்ளை ஆசை. எப்பாடு பட்டாவது பிள்ளையின் கண்ணைச் சரியாக்கிவிட வேண்டும் என்று ஒரே தீவிரமாக இருந்த பகதூர், தில்லி ஆஸ்பத்திரியில் ஆபரேஷன் செய்தால் கண் பார்வை வந்துவிடும் என்ற நம்பிக்கையுடன் தன் முதலாளியைக் கெஞ்சிக் கூத்தாடி, பத்து நாட்கள் விடுப்பும், 200 ரூபாய் கடனும் வாங்கிக் கொண்டு; இந்தப் பயணத்தை மேற்கொண்டிருந்தான்.

தன் குறையின் முழுப்பரிமாணத்தையோ தந்தையின் மனக்கவலையையோ சரியாகப் புரிந்து கொள்ளாத சிறுவன் முன்னுவோ, தன்னுடன் விளையாடும் அக்கம்பக்கத்து வீட்டுச் சிறுவர்களிடம் தான் தில்லிக்குப் போகும் பெருமையை அளந்து கொண்டிருந்தான்.

''நான் தில்லிக்குப் போய் பிர்லா மந்திர், ராஜ்காட், இந்தியாகேட் எல்லாம் பார்க்கப் போறேனே?'' என்று கும்மாளமாகக் குதித்த முன்னுவைப் பார்த்து அவன் நண்பர்கள் கைகொட்டிச் சிரித்தார்கள்.

''உனக்குத் தான் கண்ணே தெரியாதே! நீ எப்படி எல்லா இடமும் பார்ப்பே?'' என்ற அவர்கள் கேள்விக்கு முன்னு துளிக் கூடத் தயங்காமல் நம்பிக்கையுடன் நெஞ்சை நிமிர்த்தி, கைகளை அகல விரித்து ''தில்லியிலே பெரிய்ய...ய ஆஸ்பத்திரி இருக்கு. அங்க ஆபரேஷன் பண்ணின உடனே எனக்கு நன்னுக் கண் தெரியும். அப்புறம், தில்லி பூராச் சுற்றிப் பார்ப்பேனே!'' என்று சொல்லி விட்டு, உற்சாகமாகத் தந்தையின் கையைப் பிடித்துக் கொண்டு, தில்லியை நோக்கிப் புறப்பட்டான்.

* * * * * * *

தில்லி ரயில் நிலையத்தை வந்தடைந்த பகதூர், டவுன் ஆஸ்பத்திரியில் எழுதிக் கொடுத்திருந்த சீட்டை எதிரில் தென்பட்ட நாலைந்து பேர்களிடம் காண்பித்து, தட்டுத்தடுமாறி ஒரு வழியாக ஆஸ்பத்திரியை வந்தடைந்தான். அடுக்குமாடிக் கட்டிடமான அந்த ஆஸ்பத்திரியின் பிரும்மாண்டமான தோற்றத்தையும், குறுக்கும் நெடுக்குமாகக் கழுத்தில் ஸ்டெதாஸ்கோப்புடன் 'விசுக் விசுக்' என்று நடமாடும் டாக்டர்களையும், சாரிசாரியாக வரும் நோயாளிகளையும் கண்டவுடன், பகதூருக்குப்பயணத்தின் அலுப்பும், களைப்பும் மறந்துபோய், புதிய தெம்பு உண்டாயிற்று. மனத்தில் நம்பிக்கை ஒளி பிறந்தது.

''முன்னு! எவ்வளோ பெரிய ஆஸ்பத்திரி தெரியுமா? அடேயப்பா! எத்தனை டாக்டர்கள்! இங்கேயில்லாத வைத்தியமா? என் கண்ணு! உனக்கு நிச்சயம் பார்வை வந்துடும்,'' என்று பிள்ளையைத் தூக்கிக்கொண்டு ஆனந்தக் கூத்தாடினான் பகதூர்.

அவர்கள் ஓ. பி. டி. யை அடைவதற்கும் மணி பன்னிரண்டடிப்பதற்கும் சரியாக இருந்தது. ஓ. பி. டி.யின் பதிவு கவுண்டரை மூடிக் கொண்டிருந்த ஆளிடம், ப. க தூ ர், ''நான் ரொம்பத் தொலைவிலிருந்து வரேங்க. கொஞ்சம் தயவு பண்ணனும்'' என்று கெஞ்சிப் பார்த்தான். இப்படிப்பட்ட கெஞ்சல்களைத் தினம் தினம் பார்க்கும் கவுண்டர் கிளார்க்கோ, இயந்திர கதியில், ''இனி நாளை காலை ஒன்பது மணிக்குத்தான் டாக்டரைப் பார்க்க முடியும்'' என்று அறிவித்துவிட்டுப் போய்விட்டான்.

இந்த வரவேற்பு மனத்தில் தற்காலிகமாக ஏற்படுகிற ஏமாற்றத்தைத் துடைத்தெறிந்து விட்டு, மறுநாள் காலை வரை எங்கே செல்வது என்ற யோசனையுடன் சுற்றும், முற்றும் பார்த்தான் பகதூர். ஆஸ்பத்திரியைச் சுற்றி

''என் தாத்தாவை ஜி. ஹெச்சுலே அட்மிட் செய்தது ஜனவரி; ஆபரேஷன் பிப்ரவரி, இப்ப அவர் மார்ச்சுவரி...''



யுள்ள புல்வெளியில் இவனைப் போல் வெளியூரிலிருந்து வந்திருந்த நோயாளிகளும், அவர்களுக்குத் துணையாக வந்தவர்களும், கூட்டம் கூட்டமாக, தங்களுடைய மூட்டை முடிச்சுக்களுடன் தங்கியிருந்தார்கள். பகதூரும் அவர்களைப் பின்பற்றி அந்தப் புல்வெளியிலேயே தங்கிக் கொண்டான்.

மறுநாள் காலை ஒரு ரூபாய் கொடுத்துக் கார்டு வாங்கிக் கொண்டு, இரண்டு மணி நேரம் க்யூவில் நின்ற பிறகு பகதூரின் முறை வந்தது. இரண்டு டாக்டர்கள் அமர்ந்திருந்த அந்த அறைக்குள் பணிவுடன் கும்பிடு போட்டுக் கொண்டே நுழைந்து, தான் கொண்டு வந்திருந்த சீட்டை ஒரு டாக்டரிடம் நீட்டினான். இதற்குள் இரண்டாவது டாக்டர் ''என்ன கம்ப்ளெண்ட்?'' என்று மாமூல் கேள்விகளை ஆரம்பித்தார்.

பகதூரோ கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லாமல் ''எப்படியாவது என் பிள்ளைக்குக் கண் பார்வையைக் கொடுத்திடுங்க! உங்களை நம்பித்தான் இவ்வளவு தூரம் வந்திருக்கேன். இந்த ஆஸ்பத்திரியில தான் அந்த ஆபரேஷன் பண்ண முடியும்னு டவுன் ஆஸ்பத்திரியில சொன்னாங்க. முடியாதுன்னு சொல்லிடாதீங்க!'' என்று ஒரேயடியாகப் புலம்ப ஆரம்பித்தான்.

பகதூர் கொடுத்த சீட்டைப் படித்துக் கொண்டிருந்த முதல் டாக்டர் திடீரென்று உற்சாகமாகத் தன் சக டாக்டரிடம் ஆங்கிலத்தில்,

''திஸ் இஸ் ஆன் இண்ட்ரஸ்டிங் கேஸ்! இவனுக்குப் பிறந்த பெண் குழந்தைகள் இரண்டும் நார்மல். ஆண் குழந்தைகள் இருவருக்கும் கிட்டத்தட்ட ஒரே மாதிரி கோளாறுகள். மேலும் முன்னாவுக்கு இந்தச் சிறு வயதிலேயே நீரிழிவு நோய் இருப்பதற்கான அறிகுறிகள் வேறு இருக்கின்றன. நாம் இந்தக் கேஸை அட்மிட் பண்ணிக்கலாம்'' என்று சொல்லி, கார்டில் 'அட்மிட்' என்று எழுதிக் கொடுத்தார்.

உடனே, தாங்க முடியாத ஆனந்தத்துடன், பகதூர், ''என் முன்னாவுக்கு என்னிக்குங்க ஆபரேஷன்? ஆபரேஷன் பண்ணினா நிச்சயமாப் பார்வை வந்திடுமில்லையா?'' என்று அந்த டாக்டர்களைத் தொண தொணவென்று நச்சரிக்க ஆரம்பித்தான். ''முதலில் பிள்ளையை வார்டில் அட்மிட் பண்ணு. எல்லாத்தையும் இப்பவே சொல்ல முடியுமா? டெஸ்ட் எல்லாம் பண்ண வேண்டாமா?'' என்று அதட்டவும், பகதூர் அந்த அறையை விட்டு நகர்ந்தான்.

அட்மிட் செய்வதற்கான பதிவுக் கவுண்டரைத் தேடிக் கண்டுபிடித்து, அங்கு அவர்கள் கேட்ட ஐம்பது ரூபாய் முன் பணத்தைக் கட்டி, ஒரு வழியாகப் பிள்ளையை வார்டில் சேர்ப்பதற்குள், பகதூருக்கு அந்தப் பிரம்மாண்டமான ஆஸ்பத்திரியில் அங்குமிங்குமாக அலைந்து, காலும், கையும் அசந்து போய் விட்டது. இதுவரை கட்டில், மெத்தை இவைகளின் சுகத்தை அனுபவித்திராத சிறுவன் முன்னாவோ, கட்டிலிலிருந்து ஏறி, இறங்கி, ரப்பர் மெத்தையில் ''பொம், பொம்''மென்றுத் துள்ளிக் குதித்து, ஆனந்தப்பட்டுக் கொண்டிருந்தான். அன்று முழுவதும் நர்ஸோ, டாக்டரோ ஒருவருமே அவனுடைய கட்டிலின் அருகில் கூட வரவில்லை. அங்கு தள்ளு வண்டியில் வரும் [illegible], கிச்சடி (பொங்கல்), சப்ஜியையும் சாப்பிட்டுக் கொண்டு ''அக்கடா'' என்று உட்கார்ந்திருந்தான் பகதூர்.

மறுநாள் காலை முன்னாவை அட்மிட் செய்த டாக்டரும், இன்னும் ஐந்தாறு டாக்டர்களுமாக வந்து முன்னாவின் கண்களை டார்ச் அடித்துப் பார்த்துவிட்டு ஆங்கிலத்தில் பத்துப் பதினைந்து நிமிடங்களுக்கு ஏதோ பேசிக் கொண்டார்கள். பகதூரோ தன்னுடைய பிள்ளையை இத்தனை டாக்டர்கள் சேர்ந்து கவனிக்கிறார்களே என்ற பெருமிதத்தில், தான் குறுக்கே ஒன்றும் பேசக் கூடாது என்று, அவர்கள் கேட்ட ஒன்றிரண்டு கேள்விகளுக்கு மட்டும் பதிலளித்து விட்டுப் பவ்யமாகக் கையைக் கட்டிக் கொண்டு நின்றான்.

டாக்டர்கள் இவனுடைய கட்டிலை விட்டு நகர ஆரம்பித்தவுடன் பயந்துகொண்டே, ''டாக்டர்'' என்று மெதுவாகக் குரல் எழுப்பியது ஒருவருடைய காதிலும் விழவில்லை. அவ்வளவுதான்! இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு அன்று முழுவதும் மோட்டு வளையைப் பார்த்துக் கொண்டு பகதூர் உட்கார்ந்திருந்தான். கட்டில், மெத்தை, விளையாட்டில் அலுத்துப் போன முன்னாவோ, ''அப்பா, எனக்கு எப்ப கண் சரியாகும்? என்னிக்கு என்னை பிர்லா மந்திர், இந்தியாகேட் எல்லாம் பார்க்க அழைச்சிண்டு போவேள்?'' என்று தொண தொணக்க ஆரம்பித்தான்.

அதற்கு அடுத்த நாள் காலை பத்து மணி சுமாருக்கு ஆஸ்பத்திரி சேவகன், முன்னாவையும் பகதூரையும் வகுப்பறை போன்று காணப்பட்ட ஓர் அறைக்கு அழைத்துச் சென்றான். அங்கு கையில் நோட்டுப் புத்தகமும், பேனாவுமாக உட்கார்ந்திருந்த பத்துப் பதினைந்து டாக்டர்களும், இவர்களை நிறுத்தி வைத்துக் கேள்விக் கணைகளைத் தொடுக்க ஆரம்பித்தார்கள்.

---

''நாங்கள்லாம் தகரக்குவளை வைச்சிருக்கோம். நீ மட்டும் ஏன் பிலிம் ரோல் பெட்டியில் பிச்சை எடுக்கிறே?''

''சினிமா எடுத்ததால் இந்தத் தொழிலுக்கு வந்தவன். அந்த ஞாபகமாத்தான், இப்படி.''

—இளை. அ. கதிர்வேல்.



கருத்துப் பரிமாறலும் நடந்தது. தன்னால் முடிந்த வரை சரியாக விடையளித்தான். எதற்காக இத்தனை கேள்விகள் என்று உள்ளூர எரிச்சல் உண்டானாலும், நமக்கென்ன தெரியும் ஒருவேளை எல்லா விபரமும் சரியாகத் தெரிந்தால், இன்னும் நன்றாக வைத்தியம் செய்ய முடியும் போலும் என்று தன்னைச் சமாதானம் செய்துகொண்டான்.

இரண்டொன்று மறுநாள் முன்னாவைக் கண் சிகிச்சை வார்டிலிருந்து, நீரிழிவு நோய்க்கான சிகிச்சையளிப்பதற்காக, பொது மருத்துவ வார்டிற்கு மாற்றிவிட்டார்கள். அந்த வார்டிலும் ஒருநாள் முழுவதும் தவம் கிடந்த பிறகு, பழையபடியே நாலைந்து டாக்டர்கள் வந்து இளம் வயதிலேயே சர்க்கரை நோயுள்ள அபூர்வ நோயாளியான முன்னாவைப் பற்றிய கேள்விகள், அவர்களுக்குள் கருத்துப் பரிமாறல்கள் எல்லாம் தொடர்ந்தன.

நீரிழிவு நோயின் பரிமாணத்தைக் கண்டு பிடிப்பதற்காக முன்னாவை வெறும் வயிற்றில் க்ளுகோஸ் தண்ணீர் அருந்த வைத்து, அரை மணி நேர இடைவெளியில் மதியம் ஒரு மணி வரை, ஐந்து முறை சிறுநீர், இரத்தம் இரண்டையும் பரிசோதனைக்காக எடுத்துக் கொண்டார்கள்.

இப்படியாக முன்னாவை ஆஸ்பத்திரியில் சேர்த்து ஒரு வாரம் ஆகிவிட்டது. முதலாளியிடமிருந்து கெஞ்சிக் கூத்தாடி, பெற்றிருந்த விடுப்பும், கைச் செலவிற்காகக் கொண்டு வந்திருந்த பணமும் மளமள வென்று கரைய ஆரம்பிக்கவே, பகதூருக்கு ஆஸ்பத்திரியில் இருப்புக் கொள்ளவில்லை. எப்பொழுது ஆபரேஷன் செய்யப் போகிறார்கள், என்ன வைத்தியம் செய்கிறார்கள் என்று ஒன்றுமே புரியாமல், கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டாற்போல் இன்னும் எத்தனை நாட்களுக்கு இந்த ஆஸ்பத்திரியிலேயே அடைந்து கிடப்பது என்று ஒரே தவிப்பாக இருந்தது.

தனக்கும் மற்ற குழந்தைகள் போல் கண் தெரிந்து தில்லியெல்லாம் சுற்றிப் பார்க்க வேண்டும் என்று இதுவரையில் எவ்வளவோ பொறுமையாக இருந்த முன்னாவும், ஆஸ்பத்திரியில் செய்த சோதனைகளால் அலுத்தும் களைத்தும் போய்விட்டான். பிர்லா மந்திர், ராஜ்காட் எல்லாம் பார்க்க வேண்டும் என்ற ஆசையெல்லாம் பறந்து போய், தன்னுடைய தாயார், தன் ஊர், தன் சிநேகிதர்கள் என்று தான் பழகிய சூழ்நிலைக்காக ஏங்க ஆரம்பித்தான்.

நீரிழிவு நோய்க்கான க்ளுகோஸ் பரிசோதனையின் முடிவைப் பார்த்த டாக்டர், மூன்று மாத காலத்திற்கு முன்னா தொடர்ந்து சாப்பிட வேண்டிய மருந்துகளின் விபரத்தை எழுதிக் கொடுத்து, அவர்களை மறுபடியும் கண் சிகிச்சை வார்டிற்கு அனுப்பினார். கண் சிகிச்சை டாக்டரோ, ஆபரேஷன் செய்வதற்கு ஆறு மாதத்திற்கு க்யூ இருக்கிறது என்றும், இப்பொழுது பெயரைப் பதிவு செய்தால், ஆறு மாதத்திற்கப்பால் ஆபரேஷனுக்கான தேதியைக் குறித்துக் கொடுப்பார்கள் என்றும் சொன்னார். பெயரைப் பதிவு செய்துவிட்டு, ஆறு மாதங்கள் கழித்து ஆபரேஷனுக்காக வரும்படி சொன்ன டாக்டரிடம் இதுவரை கேட்கப் பயந்துகொண்டும், தயங்கிக் கொண்டும் இருந்த பகதூர், ஆரம்பத்தில் இருந்த நம்பிக்கை குறைந்துபோய், ''ஆபரேஷன் செய்தால் கண்ணு சரியாயிடுமா?'' என்று கேட்டான்.

டாக்டரோ, ''தீர்மானமாக ஒன்றும் சொல்ல முடியாது. எதற்கும் முயற்சி செய்து பார்க்கலாம்'' என்று பட்டும், படாமலும் பதிலளித்தார்.

நம்பிக்கை ஒளியை ஏந்தி, எதிர்காலத்தைப் பற்றிய கற்பனைக் கோட்டைகளைச் சுமந்தவண்ணம் தில்லிக்கு வந்த பகதூர், உற்சாகம் எல்லாம் வடிந்துபோய், ஒரு கையில் தான் கொண்டு வந்திருந்த துணி மூட்டையைச் சுமந்துகொண்டு, ஊரைப் பார்த்து நடையைக் கட்டினான். சிறுவன் முன்னாவோ, தான் தில்லிக்கு வந்ததன் நோக்கத்தையே மறந்துபோய்த் தன் தாயை, சகோதரியை, தன் நண்பர்களைச் சந்திக்கப் போகிறோம் என்று ஒரே உற்சாகமாக நடந்து கொண்டிருந்தான்.

பகதூர், ஆறு மாதங்கள் கழித்து, ஆபரேஷன் செய்வதற்காகப் பிள்ளையை மறுபடியும் தில்லி ஆஸ்பத்திரிக்கு அழைத்து வருவானா?



''அந்த நாளில் நீ என்னிடம் படிக்கிறப்போ ஓட்டப்பந்தயத்தில் நீதான் கடைசியா வருவே. வகுப்புலேயும் நீதான் லாஸ்ட் பெஞ்ச்!... உம்... இப்ப நீ என்ன பண்றே?''

''ரெயிலில் கடைசிப் பெட்டியில் கார்டு உத்தியோகம் பார்க்கிறேன்.''

# ஆகாச கங்கை

## 9

அன்று காலை அபூர்வமாய் மாயா ஒரு உற்சாகத்துடன் கண் விழித்தாள். பல் தேய்க்கும்போது கண்ணாடியைப் பார்த்துச் சிரித்தாள். வாயெல்லாம் வெள்ளை நுரை நிறைந்து உதட்டருகே வந்தபோது பிரஷ்ஷை எடுத்தாள். முழங்கை மார்பில் இடிக்க தலைப்பு விலகியது. வாய் நுரையை வாஷ் பேசினில் உமிழ்ந்த அவள், தன் மார்பைக் கண்டதும், 'இடியட்... ஏன் வழுக்கி விழுந்தே?' என்று தலைப்பைத் திட்டிவிட்டு மூடிக் கொண்டாள்.

முகத்தைத் துடைத்து, முன் உச்சியை லேசாக வாரிக் கொள்ளுகையில், கண்ணாடியில் ராஜம்மா தெரிந்தாள்.

''ஹாய் ராஜம்மா! எங்கே போர்ன் விட்டா?''

''இதோ கொண்டு வரேன், மாயா!'' ராஜம்மா நகர்ந்தாள்.

இரு... இரு... நான் கிச்சனுக்கு வரேன்... ராஜம்மா இன்னிக்கு நான் ரொம்ப ஹாப்பியா இருக்கேன்... ஏன் ராஜம்மா நான் ஹாப்பியா இருக்கேன்... எனக்கு ஏதானும் ஆச்சா...?''

''இன்னிலேர்ந்து நீ எப்பவும் ஹாப்பியா இருப்பே, மாயா...''

''அப்ப நேத்து நான் ஹாப்பியா இருக்கலை...? முந்தா நாள் ஏன் இருக்கலை...?''

''மொதல்லே போர்ன்விட்டா குடி...''

''டாடி எங்கே...?''

''ஹால்லே பேப்பர் படிக்கிறார்...''

''ராத்திரி என் ரூமுக்கு வந்து என் கட்டிலைச் சுத்திச் சுத்தி வந்தார் போலிருக்கு.''

ராஜம்மா பதில் பேசவில்லை.

மாயாவுடன் பேசுகிறபோது ரொம்பவும் ஜாக்கிரதையாகவும், கவனத்துடனும் இருக்க வேண்டும் என்பதை அவள் அறிவாள். சளசளவென்று பேசுகிறவள் திமரென்று மௌனத்தில் உறைந்துபோவாள். சிரித்துக் கொண்டே இருக்கையில் திமரென்று, கைகளால் கண்ணைப் பொத்திக் கொண்டு, விக்கி விக்கி அழுவாள். ஒரு நாள் முழுவதும் சாப்பிடாதவள் இன்னொரு நாள் கண்டது காணாதது மாதிரிச் சாப்பிடுவாள்.

ராஜம்மாவுக்கு மாயா ஒரு புதிராகத் தோன்றவில்லை.

அவளுடைய இந்த அபூர்வமான நோய் தான் புதிராகத் தோன்றியது. என்ன காரணம்? ஏதேனும் கெட்ட காற்று அவள் மீது வீசியிருக்கிறதா? யாராவது திருஷ்டி கழித்து நான்கு தெருக்களின் சந்திப்பில் பூசணிக் காயை உடைத்துப் போட, இவள் கால் சிதறிய துண்டில் பட்டுவிட்டதா? அல்லது ஒரு பயம் திடீரென்று தாக்கி மனப்பிராந்தியை ஏற்படுத்தியிருக்கிறதா?



போர்ன்விட்டாவைக் குடித்துக் கொண்டே, என்ன சமைக்கப் போறே...?'' என்றாள்.

''நீ சொல்றதைச் செய்யறேன்...''

''உப்பும் காரமுமா நிறையப் போட்டுச் சமை.''

''சரி.''

''குட்... இப்ப நான் டாடியைப் பார்க்கப் போகிறேன்...''

ராஜம்மா பதில் சொல்லவில்லை. மாயா வைத்த காலித் தம்ளரை எடுத்துக் கழுவப் போனாள்.

இன்று இருப்பதுபோல் மாயா என்றும் இருக்க வேண்டும். ஆனால் எப்படி? தாரக்ராம் ஆயிரமாயிரமாகக் கொட்டி இங்கிலீஷ் டாக்டர்கள் கொடுக்கிற மருந்து மாத்திரைகளைக் கொடுத்துச் சமாளிக்கப் பார்க்கிறார். தற்கால சாந்திக்கு யாராவது காக்காயைப் பிடித்துக் கஷாயம் காய்ச்சுவார்களோ? குணசீலம் இருக்கிறது. சோத்தாணிக்கரை இருக்கிறது. ஏன் மெட்ராஸ் அருகே சோளிங்கபுரம் இருக்கிறது. மாயாவின் இதயத்தினுள் ஏதோ ஒரு தொட்ட பிசுக்கு விட்ட பிசுக்கு புகுந்திருக்கிறது. உடம்பை வைத்தியம் பண்ணும் டாக்டரால் எப்படி மனத்தைக் கண்டறிந்து குணப்படுத்த முடியும்? அவர்களால் அவ்வப்போது வலியைத் தான் தீர்க்க முடியும். தெய்வச் செயல் என்று ஒன்று உண்டு என்பதை ஏன் தாரக்ராம் புரிந்து கொள்ளவில்லை? ராஜம்மா மனம் சோர்ந்துபோனாள். மாயாவுக்குப் பூரண குணம் ஆகும் வரையில் கல்யாணமே செய்து வைக்கக் கூடாது என்பது அவளுடைய கருத்து. முன்பின் தெரியாத ஒருவனைக் கண்டு மாயாவின் மனப்பிராந்தி மேலும் அதிகரிக்குமே? இது ஏன் இவ்வளவு பெரிய தாரக்ராமுக்குப் புரியவில்லை? புருஷன் — மனைவி என்றால் லேசாதா? அந்தரங்கங்கள் இல்லாத தாம்பத்தியம் ஏது? முதல் இரவு என்று ஒரு இரவு இருக்கிறதே? மாயா பயந்து அலறுவாளா அல்லது பயத்தில் வெலவெலத்துப் போய், பேச முடியாமல் மயங்கி விழுவாளா? அல்லது வெறியுடன் ஏற்றுக் கொள்ளுவாளா?

ராஜம்மா தன் சிந்தனை அனாவசியமாகத் தொடருகிறது என்பதை உணர்ந்து, பிரஷர் குக்கரை எடுக்கப் போனாள்.

* * * * *

''குட் மார்னிங் டாடி!''

''ஓ, மாயா டார்லிங்... குட் மார்னிங்... போர்ன்விட்டா சாப்பிட்டாயா?''

''ஓ, யெஸ்... டாடி, எனி இம்பார்ட்டண்ட் நியூஸ்...?''

''இந்தா, நீயே பாரு...''

அவர் பேப்பரை நீட்ட மாயா வாங்கிக் கொண்டாள். ஆனால் உடனே படிக்க ஆரம்பிக்கவில்லை.

''டாடி!''

''என்ன மாயா?''

''ரெண்டு மூணு நாள் முன்னாலே யாரோ ஒருத்தனைப் பத்தி என்கிட்ட என்னவோ சொன்னீங்க. அவன் பேர் என்ன? என்ன சொன்னீங்க?''

''யாரைப் பத்திச் சொன்னேன்? நினைவு இல்லையே!''

''ஆல்பம் கூடக் கொடுத்தீங்களே, அப்பா!''

பி.வி.ஆர்



"ஓ. அரவிந்தனா!" தாரக்ராமுக்கு, அரவிந்தன் தான் கொண்டு வந்திருந்த ஆல்பத்தை டாஜ் ஓட்டலிலே மறந்து வைத்துப் போனது சௌகரியமாக இருந்தது. அந்தப் பழைய ஆல்பத்தை மாயா பார்த்தால் நல்லது என்று நினைத்துக் கொண்டு வந்திருந்தார். இப்போது மாயா அதுபற்றிக் கேட்கிறாள்.

"யெஸ் அரவிந்தன்! ஹூ இஸ் ஹி?"

"எ குட் மேன்... எ ஜென்டில்மேன்... வெரி பிரில்லியண்ட் என்ஜினியர்.... ஃபைன் பெர்ஸனாலிட்டி... நீ இன்னும் ஆல்பத்தைப் பார்க்கலியா?"

"ஊஹூம்... இன்னிக்குப் பார்க்கப் போறேன்..."

"அதிலே நீ எட்டு வயசுப் பொண்ணா இருக்கே... அம்மா, நான் எல்லோரும் இருக்கோம்..."

"இதை ஏன் இத்தனை நாளா எனக்கு நீங்க காட்டலே...?"

"அது அந்த அரவிந்தனோட ஆல்பம்... அவனோட அப்பாவும், நானும் ஃப்ரெண்ட்ஸ்.. அவனோட மதரும் உன்னோட மதரும் ஃப்ரெண்ட்ஸ்."

"அப்ப அரவிந்தனும், நானும் ஃப்ரண்ட்ஸுன்னு சொல்ல வர்றீங்களா அப்பா...?"

"உனக்கு ஞாபகமில்லையா?"

"எது?"

"நீயும் அரவிந்தனும் மெட்ராஸ் பீச்சிலே, ஊட்டி லேக்கிலே, பங்களூர் லால்பாக்லே எல்லாம் விளையாடினது...?"

"நோ... எவ்ரிதிங் இஸ் பிளாங்க்... டாடி.. டாடி...?"

"என்னம்மா?"

"எனக்கு ஏன் எல்லாம் சட்சட்னு மறந்து போறது?

"இதை எல்லாம் பத்தி வொர்ரி பண்ணிக்காதே, மாயா!"

"ஓ. கே... ஏன் இந்த ஃபெலோ,— ஐ மீன் அரவிந்தனைப் பத்திப் பேச்சு எடுத்தீங்க?"

"உன் அம்மாவுக்கு நான் யார், மாயா?"

"டோண்ட் டேக் மி ஃபார் எ பேபி டாடி! ஐ நோ தி ரிலேஷன்ஷிப்."

"அந்த மாதிரி உனக்கும் அரவிந்தனுக்கும் ஒரு ரிலேஷன்ஷிப் உண்டாகப் போறது."

"யூ மீன் மாரேஜ்?"

"யெஸ்."

"ஒய் ஷுட் ஐ மேரி?"

"மொதல்லே ஆல்பத்தைப் பாரும்மா... கடைசி ரெண்டு மூணு ஃபோலியோவிலே அரவிந்தனோட ரீஸன்ட் போட்டோஸ் இருக்கு... பாரு."

"டாடி...!"

"யெஸ் மாயா?"

"மாரேஜ் ஆயிடுத்துன்னா நான் இங்கேந்து போயிடணுமா...?"

"யார் சொன்னா?"

"பின்னே?"

அவன் இங்கே வந்து உன்னோடு இருப்பான் மாயா!"

"இப்பத்தான் புரியறது. டாடி, நான் ஏன் மார்னிங்லேந்து ரொம்ப ஹாப்பியா இருக்கேன்னு! ஸோ ஐ ஆம் கெட்டிங் மாரீட்...! ஹாஹ்ஹா... ஹாஹ்ஹா... மேரேஜ் இஸ் மேட் இன் ஹெவன்... பட் ஐ ஆம் ஆன் தி எர்த்... ஹாஹ்ஹா..." மாயா பேப்பரை எடுத்துக் கொண்டு வெளியேறினாள்.

தாரக்ராம் பெருமூச்செறிந்தார்.

இப்போது இப்படித் துள்ளும் மாயா இன்னும் சற்றுநேரத்தில் எப்படி மாறப் போகிறாளோ?

எழுந்தார். அறைக்குப் போனார். டிரெஸ்ஸிங் டேபிளின் மேல் மூன்றுவிதமான மாத்திரைகளும் இருக்கின்றனவா என்று பார்த்தார்.

லார் கோட்டில் இருந்தது. அது இன்று தேவைப்படும் என்று தோன்றவில்லை... கண்களில் மருட்சியும், மனத்தில் ஒருவித பயமும் இருந்தால் மனத்தைச் சமனப்படுத்த இந்த மாத்திரை.

அவள் அட்டகாசமாகப் பேசவில்லை. எகிறிக் குதிக்கவில்லை. ஸெரனேஸ் மாத்திரையும் தேவை இருக்காது.

மாயா, மன பலவீனத்துடன் உட்கார்ந்தவள் உட்கார்ந்தபடியே தானாக மௌனமாக அழவில்லை. டெப்ஸானில் மாத்திரையும் தேவைப்படாது.

ஒரு நம்பிக்கை அவருக்கு ஏற்பட்டது. மாயா அன்று, அபூர்வமாக இருக்கும் தன்மையில், சாதாரணப் பணக்காரப் பெண்ணாக இருக்கிறாள்.

அன்று மட்டும் அரவிந்தன் வந்துவிட்டால் பிரச்னையே இராது.

* * * * *

சரியாக இரண்டு மணிக்கு ஃபோன் அடித்தது.

"தாரக்ராம் ஹியர்..."

"குட் ஆஃப்டர்நூன் சார்... அரவிந்தன் ஸ்பீக்கிங்..."

"அந்துவா... க்ரேட்! எப்ப வந்தே... எங்கிருந்து பேசறே...?"

"ஓட்டல் சென்ட்டார்..."

"மெட்ராஸ்லேந்து போன் பண்ணியிருக்கலாமே...? வண்டியை ஏர்ப்போர்ட்டுக்கு அனுப்பியிருப்பேனே...? சரி, நீ அங்கேயே இரு... என் காரை அனுப்பறேன்... யூ கேன் பி ஹியர் அட் த்ரீ தர்ட்டி..."

"வேண்டாம் சார்... நான் டாக்ஸியில் வந்து கொள்றேன்..."

"ஆர் யூ ஷ்யூர் அந்து?"

"வெரிமச்...

"தென் த்ரீ தர்ட்டி..."

"யெஸ் சார்..."

"சார்னு கூப்பிடாதே, அந்து! நான் இப்ப தாரக் மாமா!" சிரித்தார்... ஆனால் எதிர் சிரிப்பு இல்லை.

டெலிபோனை வைத்தபோது ஆரவாரத்தில் தாரக்ராம் ராஜம்மாவிடம் ஓடினார்.

அவள் சமையலறையில் தன் நாலரை அடி நீளத்தை இரண்டரையாகக் குறுக்கிப் படுத்திருந்தாள்.



எனது ஆறு வயதுச்
செல்வி பரத
நாட்டியம் நன்கு
ஆடுகிருள்.
நாளைய உலகமே
அவளது மேடையாம்."

# போர்ன்விடாவின் இனிமைக் காலம்

போர்ன்விடா அளித்தவரை பாச மனங்கள்
நேசத்தோடு நினைத்து மகிழும் ஒருநாள்!

வளரும் குழந்தைகள் வேறு எந்த மால்ட்டட் பானங்களையும்விட போர்ன்விடாவை விரும்புவதேன்? போர்ன்விடா அருந்தி வளர்ந்த இரு தலைமுறையினர் தங்களுடைய குழந்தைகளுக்கு போர்ன்விடா தவிர வேறு எதுவும் உகந்ததல்ல என்று வலியுறுத்திக் கூறுவதேன்?

அதில்... உற்சாகம் துள்ளும் சுவை மட்டுமல்ல, காட்பரிஸின் பிரபல பெயர் மட்டுமல்ல. அவற்றைவிட அதிகமோ அதிகம். அதுதான போர்ன்விடா! அதோடு வளருங்கள்.

காட்பரிஸ்
**போர்ன்விடா**
நல்ல வளர்ச்சி,
போர்ன்விடா பயிற்சி.




OBM/3783 TAM

தாரக்ராமைக் கண்டதும் வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்து நின்றான்.

''மூன்றரை மணிக்கு வரான்.''

''சரி... எல்லாம் ரெடி பண்றேன்...''

''புதுசா ஸ்வீட் பண்ண வேண்டாம். நேத்து செய்த அல்வாவே போதும்.''

''சரி... போண்டா மட்டும் பண்றேன்... உருளைக் கிழங்கும் கடலை மாவும் ரெடியா இருக்கு...''

''சரி...''

''மாயாவைக் கொஞ்சம் தயார் செய்யுங்கோ.''

''ஏன், என்னாச்சு?''

''பத்து பத்தரைக்கு அவ ரூமுக்குப் போனேன்... கட்டில்லே உட்கார்ந்து, கையிலே பிரிச்சு வைச்ச ஆல்பம் ஒண்ணைப் பார்த்து மௌனமா அழுதுண்டேயிருந்தா... கிட்டப் போய்ப் பார்த்தேன்... நான் இருப்பது கூட அவளுக்குத் தெரியலே... எட்டிப் பார்த்தேன்... ஏதோ பழைய குரூப் போட்டோ மாதிரித் தெரிஞ்சுது...''

தாரக்ராம் திடுக்கிட்டார். காலையில் அவர் எவ்வளவு தைரியமாக நம்பிக்கையுடன் இருந்தார்? மாத்திரை எதுவும் தேவைப்படாது என்று நினைத்தார்!

''இப்ப என்ன செய்துட்டிருக்கா? சாப்பிட்டாளா?''

''அவளுக்குப் பிடிச்சதையெல்லாம் அவ கார்த்தாலே சொன்ன மாதிரி பண்ணினேன்... ஆனா சாதத்தை வெரலாலே அளைஞ்சா... முழுசா மூணுவாய் கூடச் சாப்பிடலே... இப்ப... கொஞ்ச நேரம் முன்னாடிப் போய்ப் பார்த்தேன். மடியிலே ஆல்பம். அதைக் கிழிக்கிற மாதிரிப் பார்த்துண்டிருக்கா...''

''அழறாளா...?''

''இப்ப அழலே.''

தாரக்ராம் வார்கோட்டில் மாத்திரை தான் அப்போதைய நிலைமைக்கு ஏற்றது என்று எண்ணி எடுக்கப் போனார்.

* * * * *

மூன்றரை மணிக்கு அரவிந்தன் வந்தான். போர்ட்டிகோவில் அவனை வரவேற்ற தாரக்ராம் ஹாலுக்கு அழைத்து வந்தார். ஓரிரு நிமிட அர்த்தமற்றப் பேச்சுக்குப் பிறகு அரவிந்தன், ''சார், நீங்க மகாப் பிரயத்தனம் பண்ணியிருக்கீங்க, என்னை உங்க மாப்பிள்ளையாக்கிக்க...'' என்றான். குரலில் கோபமோ, ஆத்திரமோ இல்லை. ஒரு அழுத்தம் ஒலித்தது.

''நான் ஒருத்தியை விரும்பிக் கல்யாணம் பண்ணிக்கலாம்னு இருந்தேன். ஆனா இப்ப அவளை வழிவிட்டுட்டா... அவ மனசோட மாற்றத்துக்கும் உங்களுக்கும் நிச்சயமா ஒரு சம்பந்தம் இருக்கு... ஆனா எப்படின்னு இப்பப் புரியலே.. ஒருநா புரிஞ்சுப்பேன்..''

''அந்து... வந்து...''

''நீங்க எதுவுமே சொல்ல வேண்டாம் சார்... உங்க நிலைமை புரியறது எனக்கு...



''முதல் முதலாக எனக்கு சினிமாவில் விதவைத் தாயாக நடிக்க சான்ஸ் கிடைச்சது... ஆசி புரியுங்க அத்தான்...''
''தீர்க்க சுமங்கலி பவ!...''

ஒருவேளை நானும் உங்களை மாதிரித்தான் நடந்து கொண்டிருப்பேனோ என்னவோ... ஆனா ஒண்ணு மட்டும் ப்ளெயினாச் சொல்லிடறேன்... நீங்க கம்பெனி சேர்மன்ங்கற பயத்துக்காக நான் மாயா கழுத்திலே தாலி கட்டப் போவதில்லை. என் அம்மா, அப்பா, கோமளி மாமி இவங்களோட பழைய ஆசைகளுக்காகவும், செண்டிமெண்டல் ரீஸனுக்காகவும் கட்டப் போறதில்லை! நீங்க சொன்னீங்க, மாயாவைக் குணப்படுத்த என் ஒருவனால்தான் முடியும்னு சொன்னீங்க... என் ஃப்ரண்ட்டும், என்னை உசுப்பபடுத்தி ஒரு சவாலா ஏத்துக்கச் சொன்னா... ஆகாசத்திலேந்து ஒரு கங்கையை பகீரதன் கொண்டு வர முடியுமானா, உங்க பொண்ணையும் என்னாலே மாத்த முடியும்னு என் ஃப்ரண்ட் சொல்றா...''

தாரக்ராம் ஸ்தம்பித்துப் போய் நின்றார்.

அவருக்குப் பேச்சு எழவில்லை. அவர் கண் முன் பிறந்து, வளர்ந்த ஒரு பிள்ளையா இப்படிப் பேசுகிறான்?

''இப்ப நான் மாயாவைப் பார்க்கலாமா, சார்?'' என்றான் அரவிந்தன்.

''ஷ்யூர்!'' எழுந்தார்.

மாயாவின் அறையில் மாயா காலையில் இருந்தது போல இருப்பதைக் கண்டதும் திருப்தி ஏற்பட்டது.

''மாயா டார்லிங்!''

''என்ன அப்பா...?''

''கம் ஆன்.. கம் வித் மி!''

''எனி திங் ஸ்பெஷல்...?''

''யெஸ்... வெரி வெரி ஸ்பெஷல்!''

ஹாலினுள் பிரவேசிக்கும் போதே மாயா அரவிந்தனைப் பார்த்துவிட்டாள்.

திடீரென மின்னல் ஒன்று அவளைத் தாக்குவது போன்ற பிரமை அவளுக்கு ஏற்பட்டது. இவனை அவள் எங்கேயோ, எப்போதோ பார்த்திருக்கிறாள்!

எங்கே?

எப்போது?

அவளுடைய ஞாபக சக்தி அவளைக் கைவிட்டது..

மாயாவைக் கண்டதும் அரவிந்தன் எழுந்தான், பார்த்தான்.

ஒருவரை ஒருவர் ஊடுருவிப் பார்த்துக் கொள்ளுவதைக் கண்ட தாரக்ராம் ஒரு க்ஷணம் பயந்து போனார். அவர்களுடைய கண்கள் ஏன் இப்படித் தழுவிக் கொள்ளுகின்றன?

(தொடரும்)

## டெபாசிட்தாரர்களுக்கு

# 24%

## வட்டி வழங்கப்படுகிறது

மேற்படி கூடுதல் வட்டி பென்ஷனர், மகளிர், மைனர்களுக்கு மட்டும்

"வெள்ளிக் குத்துவிளக்கு" அன்பளிப்புடன் வழங்கப்படும்

கீழ்க்கண்ட வட்டி விகிதங்களில் டெபாசிட்டுகள் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன

| 1-வருடம் | 2-வருடங்கள் | 3-வருடங்கள் | 5-வருடங்கள் |
| --- | --- | --- | --- |
| 17% | 18% | 19% | 22% |

# ஜெயசக்தி பைனான்சியர்ஸ்

(A LEADING HIRE PURCHASE FINANCIERS)

சென்னை : 39, நடேச ஐயர் தெரு (2வது மாடி)
சிவா-விஷ்ணு கோவில் அருகில்
உஸ்மான் ரோடு, தி.நகர், சென்னை-600 017.
போன் : 447186, 442218

பெங்களூர் : 24 1-A, மார்கோஸா ரோடு (10வது கிராஸ்)
மல்லேஸ்வரம், பெங்களூர்-560 003.
போன் : 366971

திருச்சி : 22 மதுரை ரோடு (முதல் மாடி)
திருச்சிராப்பள்ளி-620 008

பாண்டிச்சேரி : 11, செரு தெரு (கனரா வங்கி எதிரில்)
பாண்டிச்சேரி-605 001

தஞ்சாவூர் : எண் : 2 & 3 முதல் மாடி ஜி. ஏ. கனால் ரோடு,
தஞ்சாவூர்-613 001. போன் : 1626

திருவண்ணாமலை : 14-A, ஆனைக்கட்டி தெரு,
திருவண்ணாமலை-606 601. போன் : 483

பட்டுக்கோட்டை : 9-A, தலையாரி தெரு,
பட்டுக்கோட்டை-614 601. போன் : 453

# வாசகர் பங்கு

**சொரிக்கும் ஆசையால்...**

மதுரையில் நண்பர் வீட்டுக்குக் குழந்தையுடன் போயிருந்தோம். அங்கே வேர்க்கடலே ஏராளமாய் இருந்தது. யாருக்குத்தான் சொரிக்க ஆசை இராது? கிளம்பும்போது குழந்தை தூங்கிவிடவே தைரியமாக அவள் மீது பாரத்தைப் போட்ட என் சித்தி, "குழந்தை கடலே கேட்டாள்" என்று வீட்டுக்காரரிடம் கூற, என் தோளில் சாய்ந்திருந்த போக்கிரி சரேலென்று நிமிர்ந்து "இல்லியே, நான் கேட்கலியே" எனவும், சித்தி பாவம் அசடு வழிய நிற்க வேண்டியதாயிற்று!

ஏ.எம். ஸ்டெல்லாராஜ், சரல்.

**இல்லாத படத்துக்கு விமர்சனம்**

ஹைதராபாத்தில் ஒரியா திரைப்பட விழா. "மாயா மிருகையா" என்ற தேசிய விருது பெற்ற படம் திரையிடப்படுவதாய் இருந்தது. அன்று பார்த்து என் விமர்சக நண்பருக்கு வேறு முக்கிய வேலே குறுக்கிட்டது. ஃபிலிம் சொசைட்டி முன்னதாகவே கொடுத்த குறிப்பை வைத்துக் கொண்டு 'ஆகா ஓகோ' என்று எழுதிவிட்டார்! கடைசி வரை பிரிண்ட் வரவேயில்லே; படம் திரையிடப்படவேயில்லே என்பது கட்டுரை அச்சான பிறகுதான் அவருக்குத் தெரிய வந்த போது வழிந்தது ஒரு டன்!

சுகந்தி சுப்பிரமணியன், செகந்திராபாத்.

**மாமாவுக்கு ஒரு முத்தம்**

கடை வீதியில் நண்பரைச் சந்தித்தேன். மனைவி, குழந்தை பற்றி அவர் பேசிக் கேட்ட ஞாபகத்தில் குழந்தையைக் கையில் வாங்கி அணைத்து, "என்னடி ஹேமா, மாமாவுக்கு முத்தம் கொடு!" எனக் கொஞ்சினேன். "என் பேரு ஹேமா இல்லே. அம்மாதான் ஹேமா!" என்று குழந்தை கூறவும் அசடு வழிய நெளிந்தேன்.

வி. பஞ்சாபகேசன், திருச்சி.

**கல்யாணச் சந்தடியில்...**

விருந்தினர் வந்தாயிற்று. சிறிதுநேரம் பேசிக் கொண்டிருந்துவிட்டு இலேபோட்டுச் சாப்பிட அழைத்தேன். பதார்த்தங்கள் பரிமாறியபின் சாதம் போடலாம் என்று பார்த்த போதுதான் கல்யாண சந்தடியில் தாலி கட்ட மறந்த கதையாக சாதம் வடிக்க மறந்துவிட்டேன் என்பது புரிந்தது. வழிவதைத் தவிர வேறு வழி?

புஷ்பலதா, சென்னே.

**பிடிவாத பேரம்**

டேராடூனில் இருந்த சமயம் ஹிந்தி தெரியாத என் கணவர் ஆட்டோக்காரனிடம், "ஆறு ரூபாய்தான் தருவேன்" என்று பேரம் பேச, அவன் "வர முடியாது" என்று முரண்டு பண்ண, கடைசியில் ஹிந்தி, ஆங்கிலம் இரண்டும் தெரிந்தஒருவர் மத்யஸ்தத்துக்கு வந்த போதுதான் புரிந்தது, இருவரும் ஒரே தொகையைக் கூறித்தான் பேரம் செய்து கொண்டிருக்கின்றனர் என்பது!

பானுமதி அண்ணாமலே, திருச்சி.

**மாதவன் செய்த மாதவம்**

வகுப்பறைக்குச் சற்று முன்னதாகவே வந்துவிட்ட பேராசிரியர் தமது ஆசனத்துக்குச் செல்லாமல் எங்களுடனே பெஞ்சில் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தார். லீவிலே போயிருந்த அவர் அன்றுதான் திரும்பியிருந்தார். ஓரிரு நிமிஷங்கழித்து வகுப்பறைக்குள் நுழைந்த மாணவர்களுள் ஒருவன், "டேய் மாதவன் வந்துட்டானுடா?" என்று சத்தமாகக் கேட்டான். பேராசிரியர் உடனே கையை உயர்த்தி, "இதோ இருக்கிறேம்பா" என்று சிநேகபாவம் மாறாமல் கூற, நாங்களெல்லாம் கொல்லென்று சிரிக்க...

சக்தி, தூத்துக்குடி.








### டிக்கெட் இல்லாக் குழந்தை

உருவத்தில் சிறிய குழந்தைக்கு டிக்கெட் வாங்காமல் பயணம் செய்தாள் அந்தப் பெண். பஸ் கிலோமீட்டர்களை விழுங்கிக் கொண்டே இருக்க கண்டக்டர் மெல்லக் குழந்தையிடம் பேச்சுக் கொடுத்து அது எந்த வகுப்பில் படிக்கிறது என்ற விவரத்தைக் கேட்டறிந்து கொண்டார். பிறகென்ன, தாயார் அசடு வழிந்து கொண்டே டிக்கெட் வாங்கினார்!

ஜெயலட்சுமி ரங்கநாதன், ஓஜார்.

### பழக்க தோஷம்

திருப்பதியில் ஒரு கல்யாணத்துக்கு நண்பருடன் சென்றிருந்தேன். பழக்க தோஷம் காரணமாகப் பாக்கெட் சீப்பை எடுத்து அவர் அன்று காலைதான் மொட்டையடித்துக் கொண்டது நினைவில்லாமல் தலை வாரிக் கொள்ளவும் நாங்கள் அடக்க மாட்டாமல் குபீரென்று சிரிக்க நண்பர் வழிந்தவிதத்தைக் காணக் கண் கோடி வேண்டும்!

கே. எஸ். வைத்தியநாதன், சென்னை.

### "ஐயாவைக் கூப்பிடு!"

நன்கொடை கோரி ஒரு நண்பர் ஒரு வீட்டுக்குள் நுழைந்தார். தோட்டத்தில் வேலை செய்து கொண்டிருந்த ஆளிடம், "ஐயாவைக் கூப்பிடுய்யா, அரை மணி பண்ணாதே! சீக்கிரம்!" என்று அதட்டவும், அந்த ஆள் உள்ளே போய் முண்டாசை நீக்கி, முண்டா பனியன் மீது ஷர்ட் அணிந்து வந்து, "வாங்க, நான்தான் இந்த வீட்டு ஐயா" என்று கூறினான். இவர் உகுத்த ஹி ஹி ஹிக்களுக்கு ஒரு கணக்கே கிடையாது!

கமலா சீதாராமன், ஹைதராபாத்.

### ஸாரி வேண்டாமா? தாங்க்ஸ்!

பஸ்ஸில் சென்று கொண்டிருந்த போது நின்று கொண்டிருந்த ஒரு பெண் தடுமாறி, அமர்ந்திருந்த என் அண்ணன் மீது விழுந்தாள். சமாளித்து அவள் எழுந்த பின் அண்ணன் பரிவாக "ஸோ ஸாரி" என்றான். அவளோ துடுக்காக, "நான்தானே விழுந்தேன், நீங்க எதற்கு ஸாரி சொல்லணும்?" என்றாள். "சரி தாங்க்ஸ்!" என்று அண்ணன் கூறியதும் பார்க்க வேண்டுமே அந்தப் பெண்ணின் முகத்தை!

வி. ஜயஸ்ரீ, மேட்டுப்பாளையம்.

### பழி ஓரிடம்...

வெளியே சென்றிருந்த மகன் சொன்ன நேரத்துக்குச் சாப்பிட வராததால் எனக்கு ஒரே கோபம். கதவு தட்டப்பட்டவுடன் எரிச்சலுடன் அவனை உரக்கத் திட்டிக் கொண்டே திறந்துவிட்டு அசடு வழிய நின்றேன். காரணம் வந்தது என் சிநேகிதியின் கணவர்!

ரேவதி ரமணி, திருநெல்வேலி.

### அசட்டு விடுமுறை!

என் கணவர் டாக்டர் என்றாலே போதும் அவர் கையெழுத்து எப்படி இருக்கும் என்று புரிந்து கொண்டுவிடலாம். அவர் ஞாயிறு வருவதாக எழுதியிருந்ததை, என்னை ஞாயிறு வரச் சொன்னதாக எண்ணிக்கொண்டு, நான் புக்ககம் செல்ல, அவர் என் அம்மா வீடு செல்ல, எங்கள் விடுமுறை அசடு வழிவதிலேயே முடிந்துப் போயிற்று!

மனோன்மணி பாலசுப்பிரமணியன், சிவகாசி.

### மலைமேனி

திருமணத்தின் போது நலங்கு இட்டுத் தாம்பூலம் தரும் சமயம். "ஏதாவது ஒரு பாட்டுப் பாடிப் பிறகு தாம்பூலம் கொடுங்கள்" என்று பலரும் வற்புறுத்தவே, "பச்சை மாமலை போல்மேனி" என்று நான் பாட









## வாசகர் பங்கு

ஆரம்பித்தேன். அடுத்த கணம் அனைவரும் கொல்லென்று சிரிக்க 'என்ன தப்புப் பண்ணினோம்?' என்று நான் இருதிருவென்று விழிக்கவும் அப்போதுதான் என் மனைவியான மணப்பெண் பச்சை நிறப் பட்டுப் புடவை அணிந்திருப்பது என் கண்ணில் பட்டது!

ஏ. ஆர். நரசிம்மன், சேத்தாண்டபட்டி.

**வாலிப முறுக்கு**

நீண்டநாள் கழித்து நண்பனைச் சந்தித்த போது அவன் கையில் சிறு குழந்தையுடன் இருக்கக் கண்டு, ''பேரனா?'' என வினவவும், ''என் குழந்தைதான்; எனக்கு என்ன அவ்வளவு வயசாகி விட்டதாய் நினைத்திரோ?'' என்று சண்டைக்கு வர ஆரம்பித்துவிட்டார். கோபம் அடங்கும் வரை அசடு வழிய வேண்டியதாகிவிட்டது.

கே. ரகுபதி, கும்பகோணம்.

**சூடாகக் கோபம் இருக்கிறது!**

ஹோட்டலில் டிபன் சாப்பிட அமர்ந்ததுமே என் அருகில் வெள்ளை பேண்ட் ஷர்ட் அணிந்து ஒரு நபர் வந்து நிற்க, ''சூடாக என்ன இருக்கிறது?'' என்று கேட்டு வைத்தேன். ''நான் சர்வர் இல்லே; இந்த இடத்தில் சாப்பிட்டுவிட்டுக் கையலம்பிக் கொண்டு வருகிறேன். காப்பி சாப்பிட வேண்டும்'' என்றாரே பார்க்கலாம்! அப்புறம் என்ன, ''ஸாரி... ஹி... ஹி... ஸாரி...'' தான்!

எம். கே. நாராயணன், ஸ்ரீரங்கம்

**கால் கடுத்த காதல்**

கல்யாணத்துக்கு ஒரு மாதம் முன்பு மனைவியாக வரப்போகிறவளிடமிருந்து ஒரு கடிதம், அன்று மார்லே கோவிலில் வந்து சந்திக்கும்படி! கலகுஷியாக நாலு மணிக்கே ஆபீஸில் பர்மிஷன் கேட்டுக் கொண்டு ஓடி கால் கடுக்க நின்றதுதான் மிச்சம். அப்புறம் தான் நினைவு வந்தது. அன்று ஏப்ரல்—1 என்று. இப்போதும் இதை நினைவுபடுத்தி என்னை அசடு வழியச் செய்து கொண்டிருக்கிறாள் என் மனைவி!

வி. பிச்சை, மாம்பழப்பட்டு.

**வண்டியளவு அசடு!**

திருச்சியிலிருந்து கும்பகோணம் வர ரயிலில் காலை இரண்டு மணிக்கு ஏறிப் படுத்துக் கொண்டோம். ஐந்து மணி அளவில் விழித்த போது எதிரே கிட்டாருடன் ஒரு இளைஞன். இசைக்கச் சொல்லி ரசித்தோம். பேச்சினூடே, ''கும்பகோணம் போகிறோம்'' என்ற போது, ''அதற்கு ஏன் சார் இந்த வண்டியில் ஏறினீர்கள்?'' என்றாரே பார்க்கலாம்! எத்தனை அசடு வழிந்திருக்கும் எங்களுக்கு—சொல்லவும் வேண்டுமா?

ஸி.எஸ். கிருஷ்ணமூர்த்தி, மேலக்காவேரி.

**தியாகத்துக்கு டாடா!**

தியேட்டர் கியூவில் நின்றிருந்த போது நண்பன் வர, அவனுக்கு நைஸாக எனக்கு முந்திய இடத்தைத் தந்துவிட்டேன். அவனோடு டிக்கெட் முடிந்துவிட்டது. எனக்கு அவன் ''டாடா'' சொல்லி தியேட்டரில் நுழைந்துவிட்டான். நான் அசடு வழிந்தோடு எனக்குப் பின்னால் நின்றவர்களின் கேலிக்கும் ஆளானேன்.

ராஜா, விருதுநகர்.

**வேஷம் கலைந்தது!**

இரண்டு வயதான என் அக்கா பெண்ணுக்கு எல்லோருடைய தலைமுடியையும் பிடித்து இழுப்பது கலைப்பது என்றால் தனி குஷி! என்னைப் பெண்பார்க்க வந்திருந்தவர் அவளை மடியில் வைத்துக் கொண்டு கொஞ்சிய போது சரேலென்று அவர் முடியைப் பிடித்து இழுக்க டோபா கையோடு வந்து விட்டது. அடக்க மாட்டாமல் நான் சிரித்து விட அவர் அசடு வழிந்தது ஆயுளுக்கும் மறக்காது!

சரஸ்வதி, பம்பாய்.

**வெற்றிகரமான வாபஸ்!**

பல்லவனில் நானும் நண்பனும் ஏறினோம். முன்னால் ஒரு ஸீட் காலியாக இருந்தது. நண்பன் முண்டியடித்துக் கொண்டு முன்னேறி ஏதோ பெரிய சாதனை புரிந்துவிட்டதுபோல் அதில் அமர்ந்தான். அடுத்தகணம் பாண்ட் ஷர்ட் அணிந்திருந்த அந்தப் பெண் திரும்பிக் கடுமையாக, ''ஏன் மிஸ்டர்! இது லேடீஸ் ஸீட்! நான் உட்கார்ந்திருப்பது தெரியலே?'' என்று பாயவும் நண்பன் பரிதாபமாக வழிந்தபடி எழுந்து மற்றவர்களுடன் நின்றுகொண்டான்.

எஸ். சந்திரசேகர், சேலம்.

**அலார இரவு!**

எங்கள் சித்தப்பாவின் முதலிரவு அறையில் பத்துப் பதினைந்து அலாரம் கடிகாரங்களை வெவ்வேறு நேரத்தில் அடிக்கிற மாதிரி 'செட்' செய்து ஆங்காங்கே ஒளித்து வைத்துவிட்டோம்! ஒன்றன் பின் ஒன்றாய் அவை அலற, அவற்றைக் கண்டுபிடித்து அவர் நிறுத்துவதற்குள் பொழுதே விடிந்து விட்டது! இதற்குப் பின் எப்போது அலாரச் சத்தம் கேட்டாலும் சித்தியைப்பார்த்துச் சித்தப்பா அசடு வழிவதைக் கண்டு நாங்கள் ரசிப்பதுண்டு!

இந்துமதி, சென்னை—1.

---

**ராகமாலிகா வழங்கும் பட்டுப்புடவையைக் குலுக்கல் முறையில் பரிசாகப் பெறும் அதிர்ஷ்டசாலி:**

**ராஜா,**
**101, காளியம்மன் கோயில் தெரு,**
**விருதுநகர்.**

---

# மோகினித் திருக்கோலம்

**21**

**உன் கண்களை
எப்போதும் பூஜிப்பேன்!**

வர்மனும் வேனஸான் துரையும் கவனிக்க, சந்தாசாகிப் படை வீட்டில் ஏதோ பூசல் நிகழ்ந்து கொண்டிருந்தது.

சச்சரவு, கூப்பாடு, மோதல், சாடல்களின் அத்தனை துணுக்குச் சத்தங்களும் ஏகோபித்துக் காதில் விழ.

அந்திநேர சிவப்பு வெளிச்சமும், தரையில் எழுந்த ஏகமான தூசியும் சேர்ந்து அந்தப் பிரதேசத்தை ஒரு பனிமூட்டம் போல் காண்பித்தது.

வழக்கமாக இந்த நேரத்திற்குள், அவர்கள் நிற்கும் எல்லையில் வேவுகாரர்கள் அவர்களை நிறுத்தி விசாரித்துவிட வேண்டும்.

அடுத்த எல்லையில் சிப்பாய்கள் நின்று விசாரிக்க வேண்டும்.

இரண்டு எல்லையுமே கேட்பாரற்று வெறுமையாக இருக்க,

"தம்பி! இங்கே என்ன நடக்கிறது! தெரியவில்லையே!" என்றார் வேன்ஸான்.

குதிரைகளை மெள்ள நடக்கவிட்டு இருவரும் படைவீட்டை நெருங்கினார்கள்.

அமளித் துமளியின் ஆதாரக் காரணங்கள் தெரிந்தன.

இளைத்துக் கொண்டு தப்பி ஓடும் காலாள் தளபதி ஒருவனை நிறுத்தி இரண்டு மடக்குச் சாராயம் கொடுத்துக் கேட்க, அவன் அங்கு நடந்தவைகளை உற்சாகத்துடன் விளக்கினான்.

சந்தா சாகிப்பை அவசரமாகப் பார்க்க, பிரெஞ்சு கவர்னர் தூப்ளே தமது பிரதிநிதி ஆந்த்ரேயை அனுப்பியிருந்தார்.

ஆர்க்காட்டை கிளைவ் கைப்பற்றியதில் தூப்ளேக்கு ஆத்திரம்!

அது ஒரு கொடிய செயல். அதற்கு எதிராக நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று தூப்ளே ஆந்த்ரே மூலம் தெரிவித்தார்.

சந்தாசாகிப் ஏற்கெனவே கலங்கி இருந்தார். ஆர்க்காடு பறிபோவதை மிகப் பெரிய இழப்பாகக் கருதவில்லை. அவரைப் பொறுத்த வரையில் திருச்சிராப்பள்ளிதான் நவாப் பதவியின் வெற்றிக்கு முக்கிய சின்னம்! இந்தக் கோட்டையை ஜெயித்தால், இனி எந்தக் கோட்டையும் படியும்.

தூப்ளே அந்த வாதத்தை ஒப்புக் கொள்ளவில்லை. ஆர்க்காடுதான் நவாபின் சுபா (ராஜதானி)வுக்கே முக்கிய சின்னம். அதை நிச்சயம் இழந்துவிடக் கூடாது என்றார்.

"பிரெஞ்சுத் துரைகளே! நீங்கள் இங்கே வருமுன்பே நான் என் மகன் ராஜா சாகிப்பை ஆர்க்காடு அனுப்பிவிட்டேன். 2000 சிப்பாய்கள் போகிறார்கள். எனது கஷ்டமான நிலையிலும் அதைச் செய்திருக்கிறேன். இனிமேல் என்னால் எதுவும் செய்வதற்கில்லை. திருச்சிராப்பள்ளி என் பெருமைக்குரிய விஷயமாகிவிட்டது. இதைவிட்டு நான் போக முடியாது. நீங்கள் வேண்டுமானால் படை அனுப்புங்கள் ஆட்சேபனை இல்லை!" என்றார் சந்தாசாகிப்.

"எங்களிடம் போதிய படை இருந்தால் தூப்ளே ஏன் தயங்கப் போகிறார்? எங்கள் படைகளை எப்போதுமே இங்கிலீஷ் நாய்களுக்கு எதிராக வைக்க வேண்டியிருக்கிறது. அவர்கள் எங்களை எப்பவும் தாக்க வரலாம்! நாங்கள் தயாராகவே இருக்க வேண்டும். தவிர, பாரிஸிலிருந்து தூப்ளேக்கு அடிக்கடி தாக்கீது வருகிறது. 'வியாபாரத்திற்குப் போனாயா, சண்டை செய்யப் போனாயா! சண்டையில் ஈடுபட்டு வர்த்தகப் பணத்தை எல்லாம் பாழாக்குகிறாயே!' என்று கோபித்து எழுதுகிறார்கள். இரண்டுபுறமும் அவருக்குத் தலைவலி" என்றார் ஆந்த்ரே!

"அப்படியானால் தூப்ளே எங்களுக்கு இனி படை அனுப்ப முடியாதா?" என்றார் சந்தாசாகிப், தாபமாக.



''இப்போது அந்த நிலையில் இல்லை'' என்றார் ஆந்த்ரே.

''அப்படியானால் பணமாவது கொடுங்கள். சண்டையில் ஜெயிக்கிறோம்,'' என்றார் சந்தாசாகிப்.

''பொக்கிஷத்தில் பணமே மிச்சமில்லை. எல்லாம் செலவழிந்துவிட்டது. புதுச்சேரியில் பாதுகாப்பு வேலை செய்ய வேண்டியிருக்கிறது. அதற்கே பணம் இல்லாமல் கஷ்டப்படுகிறது. நீங்கள் தயவு செய்து ஏதாவது ஏற்பாடு செய்து கொள்ளுங்கள்! பிரான்சிலிருந்து தங்கம் எதிர்பார்க்கிறோம். வந்தால் உடனே உதவி செய்கிறோம்'' என்றார், ஆந்த்ரே!

''எதுவும் முடியவில்லை என்றால் உங்களுக்கு நான் சிநேகிதனாக இருந்து என்ன பயன்? முகம்மதலியைப் பாருங்கள்! அவருக்கு இங்கிலீஷ்காரர்கள் வேண்டிய உதவியை அளிக்கிறார்கள். அதைப்போல நீங்கள் எனக்குச் செய்ய வேண்டாமா? என் சிப்பாய்களுக்குச் சம்பளம் கூட என்னால் கொடுக்கமுடியவில்லை. இங்கே மாசக்கணக்காக உட்கார்ந்திருக்கிறேன். நீங்கள் மராத்தியர் உதவியையாவது எனக்கு வாங்கித் தருவதுதானே!'' என்றார் சந்தாசாகிப்.

''அவர்கள் (மராத்தியர்) பகை உள்ள பக்கம் சாய்கிறார்கள். முராரி ராவுக்குப்பல ஆட்களை அனுப்பிவிட்டேன். பிரயோசனமில்லை.''

''ஏன், தனிப் படைக்காரர்களையாவது என்னிடம் சேர்த்து விடுவதுதானே?''

(மராத்தியர் அந்நாளில் தனித்தனி ராணுவக் கூட்டங்களாகக் கூட உலாத்தி வந்தார்கள். அவர்களது சேவையை ஊதியம் கொடுத்துப் பெற்றுக் கொள்ளலாம்! தனிப்படை இத்தகைய படைதான்.)

''சரி! அவர்களுக்குக் கொடுக்கவும் பணம் வேண்டுமே! எங்கே போவது?'' என்றார் ஆந்த்ரே!

''அடேயப்பா! எவ்வளவு பெரிய வர்த்தக நிர்வாகம் உங்களுடையது. உலகம் பூராவும் வியாபித்து இருக்கிறதே! இந்த உதவி செய்ய முடியாதா?''

''ஐயோ, நவாப் துரை! எங்களுக்கும் எத்தனையோ கஷ்டம் உண்டு. உலகம் பூராவும் நாங்கள் இங்கிலீஷ்காரரோடு சண்டை போட்டுக் கொண்டிருக்கிறோம். அதனால் நீங்கள் நினைக்கிற அளவுக்கு எங்களிடம் வசதி இல்லை...''

''அப்படியானால் என்னை விடுங்கள். நானே பார்த்துக் கொள்கிறேன்.''

கிட்டத்தட்ட மனஸ்தாபம் போல ஆகிவிட்ட அந்தச் சந்திப்பில் கடைசியில் ஆந்த்ரே நிச்சயம் பிரெஞ்சு உதவி இன்னும் அதிகமாக அவருக்குக் கிடைக்கும் என்று கடைசியில் வாக்குறுதி கொடுத்துவிட்டுச் சென்றார். எவ்வ காரணம் கொண்டும் சந்தாசாகிபிற்குப் பக்கபலமாகக் காவேரிக்கரையில் நிறுத்தப்பட்டிருக்கும் பிரெஞ்சுப் படையைத் திரும்ப அழைக்கப் போவதில்லை, சாகிப் கவலை கொள்ள வேண்டாம் என்று கூறிச் சென்றார் ஆந்த்ரே.

பிரெஞ்சுப் பிரதிநிதி வந்திருப்பது தெரிந்து, இந்தச் சமயத்தில் கலகம் செய்தால் சம்பளத்தைப் பெறலாம் என்று சிப்பாய்கள் பூசலைக் கிளப்பியிருக்கிறார்கள். அதுதான் இப்போது நடந்து கொண்டிருக்கிறது.

விவரங்களைக் கூறிவிட்டு அந்தக் காலாட் தலைவன் போய் விட,



வேன்ஸான் யோசித்த வண்ணம் இருந்தார்.

வர்மனுக்குச் செங்கமலாவின் நினைப்புத்தான் வந்தது.

பாவம்! இங்கேயும் அவள் ஒரு கூடாரத்தில் அடைபட்டுக் கஷ்டப்படுகிறாளோ?

ஆர்க்காட்டைவிட இங்கே வசதிகள் குறைவாக இருக்குமோ?

தன்னுடைய கதியை நினைத்துத் துக்கித்து அழுவாளோ?

அவளது மது தோய்ந்த வார்த்தைகள் அவன் மனத்தில் மீண்டும் புரண்டன. ஓலை நறுக்கில் தனது மனத்தை உருக்கி எழுதிய வார்த்தைகள்!

"போலாமா, ஐயா?" என்றான் வர்மன்.

வேன்ஸான் ஒரு மடக்கு மது குடித்துவிட்டுத் திரும்பிப் பார்த்தான்.

"தம்பி! எல்லாவற்றையும் தான் கேட்டாயே! இப்போது போனால் உனக்கு என்ன செய்தி கிடைக்கப் போகிறது?" என்றார்.

"நாம் நவாப்பையே பார்த்துக் கேட்டுவிடுவோமே!" என்றான் வர்மன்.

"அது அவ்வளவு சுலபமா?"

"ஏன், உங்களுக்கு அவரை நன்றாகத் தெரியும் என்றீர்களே!"

"தெரியும் தம்பி! ஆனால் இப்போது இருக்கும் நிலையில் என்னிடமே கடன் கேட்டாலும் கேட்பார்? நான் என்ன சொல்வது?" என்றார் வேன்ஸான்.

"ஏதாவது பதில் சொல்லுங்கள். நான் செங்கமலாவைச் சீக்கிரம் பார்க்க வேண்டும், ஐயா!" என்றான் வர்மன்.

"தம்பி! என்று நிறுத்தி அவனை ஆழ்ந்து பார்த்தான் வேன்ஸான். "அந்தப் பெண்ணின் மீது உனக்கு ஏன் அவ்வளவு ஆர்வம்?"

"ஐயா, அதுதான் எனக்குப் புரியவில்லை" என்றான், வர்மன்.

விளையாட்டுக்காகச் சொல்கிறானா என்று திரும்பிப் பார்த்து, அப்படியில்லை என்று புரிந்ததும் "உன் வயசு என்ன?" என்றார்.

"வயசைச் சொன்னால் என் ஆயுசு குறைந்துவிடும். நான் வாலிபன்" என்றான் வர்மன்.

சிரித்தார் வேன்ஸான். "இந்த வயதுதான் தக்க பருவம். இதைக் கேள் தம்பி;

"எ மாங் கேர் லெஸ்ர தி தோலோத்ரே
வோனிய
லார்ஸ்கான் நெ வெர்ரா ப்ளு ஓ ஸொலே
தலு மியேர்,
தோ ஆன் மொர், தெர்ப் ஒப்ரே, எ தெத்
வால் ஒ வி ய!"

அழகாகப் பாடினார் வேன்ஸான்.

அவருக்கு இனிய குரல் இருந்தது. அந்த வார்த்தைகள் அவனுக்கு எதுவும் புரியவில்லை. எனினும் உணர்ச்சிகரமாக வந்தது. பாடலூடே ஏதோ தனிமையான சோகமே ஒலித்தது!

"ஐயா! இதென்ன பாடல்!" என்றான் வர்மன்.

வேன்ஸான் கண்களைத் துடைத்துக் கொண்டான்.

"இது பிரெஞ்சுப் பாடல் தம்பி! பிலிப் தெஸ்போர்த் என்பவர் எழுதியிருக்கிறார். ஐம்பது வருடங்களுக்கு முன்னால் வாழ்ந்தவர். அவர் பாடல்களில் காதல் சோகமாக ஜொலிக்கும்," என்றார்.

"ஓ!" என்று கண்ணை அகல விரித்தான் வர்மன்.

"எப்போது சூரியனில் ஒளி அவிந்து போகிறதோ, கடலில் நீர் வறண்டு போகிறதோ, திரங்களில் புற்கள் மறைகின்றனவோ, வானத்தில் தாரகைகள் இருள்கின்றனவோ, அப்போதுதான் என் இதயம் உன் விழிகளைப் பூஜிப்பதை நிறுத்தும்' இதுதான் தம்பி இதன் அர்த்தம்!"

"ஐயா! மீண்டும் சொல்லுங்கள்!" என்று துள்ளிக் கேட்டான் வர்மன்.

வேன்ஸான் அதை மீண்டும் கூறினார்.

வர்மனின் கைகள் குதிரையின் கயிற்றுப் பிடிப்போடு நின்றன.

கண்கள் நீந்தி, நீந்தித் தூரவெளிகளில் ஓடியது.

இதயம் இன்பமாகப் படபடத்தது.

தத்தளித்தவாறு நின்றான் அவன். "என்ன தம்பி?" என்றார் வேன்ஸான்.

"மனத்தில் எங்கேயோ சோகம் பிழிகிறது" என்றான் நெஞ்சை அழுத்திக் கொண்டு.

"பிழிகிறதா! அதுபோதும்! மூன்று எழுத்து மோகினி உன்னை ஆட்கொண்டு விட்டாள் என்று அர்த்தம்!"

வர்மன் பேசவில்லை.

"இல்லாவிட்டால் உயிரைப் புல்லாக மதித்து இங்கே வருவாயா?"

"அதென்ன மூன்று எழுத்து மோகினி, ஐயா!"

"காதல்" என்றார் வேன்ஸான்.

பிரமித்தான் வர்மன்.

அதேநேரம் பூசல்களின் அரவமும் உச்சமாகிக் கொண்டிருந்தது.

அவை நெருங்கியும் வந்து கொண்டிருந்தன.

திடீரென்று ஒரு கும்பல் அவர்கள் பக்கத்திலேயே வந்துவிட்டது, அந்த இருட்டில் தீவர்த்திகளை ஏந்திக் கொண்டு. "விடாதே பிடி, கொல்லு!" என்று சத்தங்கள் கேட்டன.

"சந்தாசாகிப் ஒழிக" "நவாப் ஒழிக!" என்று மாற்றுக் குரல்களும் கேட்டன,

தீவர்த்தியுடன் வருபவர்கள்தான் சந்தாசாகிப்பின் சிப்பாய்கள் என்பது வேன்ஸானுக்கு நன்கு தெரிந்துவிட்டது.

அவர் கண் முன்னால் சண்டையும் துவங்கியது.

கலகச் சிப்பாய்கள் வெறியுடன் போரிடத் தொடங்கினார்கள்.

தீவர்த்திகள் விழுவதிலிருந்து, சாகிப்பின் படை இணைவது தெரிந்தது.

திடீரென்று அவர் பார்வை படை நடுவே

விழ. அங்கே சந்தாசாகிப்பே சண்டை போட்டுக் கொண்டிருப்பது தெரிந்தது.

அவர் இருக்கும் நிலையைப் பார்த்தால் அப்போது கஷ்டமாக இருந்தது.

''தம்பி! வாள் வைத்திருக்கிறாயே, சண்டை போடுவாயா?'' என்றார் வேன்ஸான்.

''ஓ, முடியும்!'' என்றான் வர்மன்.

''இதோ உனக்கு நல்ல சந்தர்ப்பம்! உன் காரியம் நிறைவேற வேண்டுமானால் நீ அவரைக் காப்பாற்று! நானும் உன்னோடு வருகிறேன்!'' என்றார் வேன்ஸான்.

அடுத்த விநாடியில் இருவரும் அந்தப் பூசலுக்குள் நுழைந்தார்கள்.

நன்றாக இருட்டிவிட்ட நேரம் அது. ஆகாயம் கறுத்த விதானமாகத் தெரிய சிற்சில விண்மீன்கள் கண் என்று தெரிந்தன. சண்டையின் உக்கிரத்தினால் கூக்குரல் சிறிது மங்கி இருந்தது. அது ஒரு இறுதிச் சண்டை என்பது போல் எல்லோர் முகத்திலும், தீவிரமும், ஆவேசமும் இருந்தது. தீவர்த்தி ஒளிகள் அங்கங்கே துள்ளி விழுந்து சண்டையைத் துளித் துளிக் காட்சியாகக் காண்பித்தன.

சந்தாசாகிப்தான் கலகக்காரர்களின் குறியாக இருந்தார்.

அவரைச் சுற்றியே தாக்குதல்கள் நடந்தன.

விசுவாசச் சிப்பாய்கள் கூட அதிகம் தாக்குதலைத் தாங்க முடியாமல் ஒவ்வொருவராக உதிர்ந்து கொண்டிருந்தார்கள்.

நவாப் படுவேகத்துடன் இயங்கி எல்லோருக்கும் உற்சாகம் கொடுத்துக் கொண்டிருந்தார்!

சீக்கிரத்தில் அந்த இளைஞன் சூறாவளி போல உட்புகுந்ததை மற்றவர்கள் ஆச்சரியத்துடன் பார்த்தார்கள்.

நொறுங்கிக் கொண்டிருந்த நவாபின் ஆட்கள், அவனைக் கண்டு சீக்கிரம் தெம்பு பெறத் தொடங்கினார்கள்.

குதிரையிலிருந்து இளைஞன் எந்தக் கவசமும் இல்லாமல் போரிட்டான். மாறி மாறி வீசும் ஒளி ஒன்று அவன் கத்தியுடையது! அல்லது தீவர்த்தியுடையது!

ஒளியில் கத்தி அடிக்கடி மின்னலிட்ட அவசரமே அது எவ்வளவு சீக்கிரம் சுழல்கிறது என்பதைக் காண்பித்தது.

''விடாதே, பிடி, கொல்லு!'' என்று நவாப் பக்கப் படைகள் உற்சாகத்தோடு கூவத் தொடங்கின.

பிளவு பட்டுக் கொண்டிருந்த நவாபின் சொந்தப் பாதுகாப்பு அரண், சீக்கிரம் தனது வலுவை மீண்டும் பெற்றது.

நவாபின் அருகாமையில் வந்திருந்த கலகக்காரர்கள் அத்தனை பேரும் அடிபட்டு மாய்ந்து போனார்கள், அல்லது ஓடிவிட்டார்கள்.

அந்த இளைஞன் வர்மன் களைத்து 'இனியும் கடினம்' என்று நினைக்கிற நேரத்தில் 'வெற்றி வெற்றி' என்கிற நவாப் படையின் கூக்குரல் கேட்டது.

உடம்பில் பல காயங்களுடன் வர்மன் ஒரே ஒரு கணம் நிதானித்துச் சுற்றிவரப் பார்த்தான்.

கலகக்காரர்கள் ஓடுவதும், சண்டை முடிவடைவதும் தெரிந்தது.

இப்போது ஒரு இருட்டு அவன் கண்முன் வியாபித்தது.

தலை சுற்றும் பிரமை ஏற்பட்டது. குதிரை மேல் இருக்க முடியவில்லை. தடாலென்று கீழே சாய்ந்தான்.

கண் திறந்த போது கூடாரத்தில் இருப்பது தெரிந்தது.

ஆச்சரியமாக இருந்தது. பிழைத்துவிட்டானா?

கூடாரத் திரையில் பகல் வெளிச்சம் பளீர் என்று அடித்தது.

உடலில் பல இடங்கள் காந்துவது இப்போது தெரிந்தது.

ஏதோ குளிர்ச்சியாக சில ஸ்பரிசங்கள் விழுந்ததும் கண்களை விசாலமாக்கினான்.

செஞ்சுகாவா அவள்? தன் மீது மருந்து தடவிக் கொண்டிருக்கிறாளே!

ஆச்சரியத்துடன் அவள் தோள் மீது கை வைத்து, ''செஞ்சுகா!''

அந்தப் பெண் சிந்துவுக்கு அது தர்மசங்கடமாக இருந்தது.

அவனை ஆதுரத்துடன் பார்த்தாள்.

''நான் செஞ்சுகா இல்லை,'' என்று சொல்லியும் அவன் கையை எடுக்கவில்லை.

மெள்ள அவள் அவன் கையைப் பற்றினாள்.

கண்களில் இரு திவலைகள் வந்தன.

(தொடரும்)



''நீ ஸ்கூட்டர் டிரைவ் பண்ணினால் பிளேனில் பறக்கிற மாதிரி இருக்கும்னு நீ சொன்னதை நம்புகிறேன்! ப்ளீஸ்! மெல்லவே போ, ராதா கண்ணு!''

# ரகசியமாய் ஒரு மோதிரம்

## வித்யா சுப்பிரமணியம்

'டொக், டொக்' என்று கைத்தடியின் சப்தம் கேட்டதும் நிமிர்ந்து பார்த்தான் பத்ரி!

சிவசுத் தாத்தா!

சட்டென்று அவன் முகம் சிறுத்து அருவருப்பைக் காட்ட "எதுக்கு இப்போ முடியாமத் தள்ளாடிண்டு வரேள்?" எரிச்சலுடன் கேட்டான்.

"குப்புசாமி கடைல நல்ல மாம்பழம் வந்திருக்காம். கார்த்தால யாரையானும் அனுப்பச் சொல்லிச் சொல்லிட்டுப் போனான்" என்றார் நப்பாசை தொனித்த குரலில்.

"ஆமா வேறே வேலை என்ன உங்களுக்கு? எப்பப்பாரு எதையானும் அசை போட்டுண்டே இருக்கணும். வாய்தான் வலிக்காதோ?" முதல் வார்த்தையைச் சப்தமாகவும் அடுத்த வாக்கியத்தை முனகலாகவும் முடித்தான்.

"ஏம்பா கண்டதையும் தின்னு உடம்பை ஜாஸ்தி பண்ணிக்கணுமா? வயசானா சுவையும் செத்துடும்பா. இவருக்கு இப்பத்தான் ஜாஸ்தியாயிருக்கு. போப்பா, போய்ப் பேசாமல் படுத்துக்கோ" விரட்டினார் ராமபத்ரன். சிவசுத்தாத்தாவின் மூத்த பிள்ளை.

ஏமாற்றத்துடன் தன் இருப்பிடத்தை அடைந்து பொத்தென்று கைத்தடியை ஆத்திரத்துடன் வைத்தார் சிவசுத்தாத்தா.

இருப்பிடம் எனக் கூறப்பட்டது பெரிய அறையோ, கூடமோ அல்ல. வாசல் திண்ணைக்கு உட்புறமாக இரண்டாள் படுக்கும் அளவுக்குத் திண்ணைக்கு இணையாகச் செல்லும் ரேழிதான். அதற்கும் திண்ணைக்கும் இடையே கம்பி அழிகள் இருக்கும். தற்சமயம் அது ஓலைப் பாய்களாலும் கிழிந்த கோணிகளாலும் மறைக்கப்பட்டுத் துக்குளியூண்டு அறையாக மாற்றப்பட்டிருந்தது.

* * * * *

அவருக்குத் தலைமாட்டில் ஒரு மண் கலயம் வைக்கப்பட்டிருக்கும். அதில்தான் அவர் எச்சில் வந்தால் துப்ப வேண்டும். ஒருநாள் விட்டு ஒருநாள் லச்சி ஒருத்தி வந்து சேர்ந்திருக்கும் எச்சிலைக் கொல்லையில் கொட்டி எரித்துவிட்டு ரேழியைச் சுத்தம் செய்து விட்டுப் போவாள்.

என்ன இதெல்லாம் என்று கேட்பவர்களுக்கு ஒரு பதில். 'சிவசுத்தாத்தாவிற்கு ஆறு மாசமாய் டீ.பி.!' ஆறு மாதம் முன்பு ஒரு நாள் லேசாய்ப் பொக்குப் பொக்கென்று இருமினார். நெஞ்சில் கபம் கட்டிக் கொண்டிருந்தது.

"அம்மாடி கௌரி! கொஞ்சம் கஷாயம் வைச்சுத் தரயா?" என்றார். அப்போதெல்லாம் உள் கூடத்தில்தான் படுக்கை. வீட்டுக்கு வேண்டிய சில்லறை ஒத்தாசைகள் செய்தார்.

நான்கு நாளாகியும் இருமலோ, சளியோ குறைந்தபாடில்லை.

முன் போல் கொள்ளுப் பேரன் பேத்திகளுக்குக் கதை சொல்ல முடியாமல் நடுநடுவில் அட்டகாசமாய் இருமல் வந்தது.

அந்தக் குடும்பத்தின் அடி ஆலமரம் சிவசு. நிறைய விழுதுகள் இப்போது பலமாக வேரூன்றிவிட்டன. அடிமரத்தைப் பற்றி இனி யாரும் கவலை கொள்ள மாட்டார்கள். அவருடைய சாதனைகளைக் கணக்கிட முழுசாய் மூன்று நாட்கள் செலவிட வேண்டும்.

சுதந்திரப் போராட்டக் காலத்தில் மூன்று மாசம் சிறையிலிருந்து தற்போது தாமிரப் பட்டயமும் உதவித் தொகையும் கூடக் கிடைத்தது. இப்போது குடும்பப் போராட்டத்தில் தோற்றுப் போய்த் தனிச் சிறையில் இருப்பதுதான் வேதனைக்குரிய விஷயம்.

"முத்தண்ணா டாக்டர் உறுதியாச் சொல்லிட்டார். உங்கப்பாக்கு டீ.பி.யேதானும்" கௌரி கனத்த பயத்துடன் உரைத்தாள்.

"அதுக்கென்ன பண்றது கௌரி? வந்தது வந்தாச்சு. சொஸ்தமாக்கிட்டாப் போச்சு" என்றார்.

"நன்னாருக்கே நீங்க சொல்றது? உங்க தம்பிகள்ளாம் இதுக்கு ஒத்துவர வேண்டாமா? முழுச் செலவும் நாம்பளே பண்ணணும்னு தலையெழுத்தா என்ன?"

* * * * * * * *

மறுநாளே அவசர மாநாடு ஒன்று சிவசுவுக்குத் தெரியாமல் அடுக்களைச் சாப்பாட்டின் போது நடந்தது.

ராமபத்ரன் முதலில் ஆரம்பித்தார். இரண்டாமவன் பரசு "அதுக்கென்ன ஆற

செலவுல ஆளுக்கு இருபது பர்ஸெண்ட் குடுத்துட்டாப் போச்சு!'' என்றார்.

இடைமறித்தார் சிவசங்கரன்.

''எனக்கு குழந்தை குட்டி எதுவும் கிடையாது. அண்ணா இருக்கற ஒரு பொண்ணுக்கும் பிள்ளைக்கும் கல்யாணம் பண்ணிட்டு நிம்மதியா இருக்கான். நாங்க அப்படியா? எனக்கும் மூணு பொண்ணு. ரெண்டு பேருக்கு இன்னும் கல்யாணம் பண்ணியாகணும். கோபு எப்பவுமே மூக்கால அழறவன். முதல் பிள்ளைக்கு இப்பதான் கல்யாணம் பண்ணியிருக்கான். அதுக்கு எதிர் மரியாதை பண்ணின புலம்பலே இன்னும் ஓயலே. சுப்புவுக்கு மூணு பேரைப் படிக்க வைச்சாகணும். இப்படி இருக்கறச்சே எங்களால காசுணு தர முடியாது.''

''பிள்ளையில்லாதவள்னு குத்திக் காமிக்கறேளா?'' பரசுவின் பெண்டாட்டி வெடித்தாள்.

''அப்ப யாரும் செலவழிக்கத் தயாரா யில்லே?''

எல்லோரும் மௌனித்தனர். ட்ரீட்மெண்ட் விஷயத்துக்கு அத்துடன் முற்றுப் புள்ளி வைக்கப்பட்டது.

அவர்களால் முடிந்தது ஒன்றுதான். கார்ப்பரேஷன் ஆஸ்பத்திரியிலிருந்து இலவசமாக மருந்து வாங்கித் தந்தார்கள்.

அடுத்த வாரமே மறுபடியும் மற்றொரு அவசரக் கூட்டம் நடந்தது அடுக்களையில்.

''எனக்கென்னமோ பயம்மாயிருக்கு! சனியன் போற காலத்துல தொத்து வியாதிய பரவ விட்டுட்டுதான் போகப் போறது! நண்டும் சிண்டுமா கொழந்தேளுக்கு வந்தா யார் பார்க்கறதாம்?''

''பேசாம டீ.பி. ஆஸ்பத்திரியில கொண்டு விட்டுடறதுதான் சரின்னுபடறது...''

''கொண்டு விடறது சரி! யாரால தினம் அலைய முடியும்?''

''இப்டி மாத்தி மாத்திப் பேசிண்டிருந்தா? இதுக்கு அப்ப என்னதான் வழி?'' கௌரி கேட்டாள்.

''எல்லோரும் ஒரு நிமிஷம் கவனியுங்கோ. வீடு அப்பா பேர்லதான் இருக்கு.. அவருக்கப்புறம்தான் இதைப் பிரிச்சுக்க முடியும். கடைசி காலத்துல வெச்சுக் காப்பாத்தாம ஆஸ்பத்திரியில தள்ளிட்டாங்கன்னு ஊர்ல நாலு பேர் வாய்ல விழ வேண்டாம்னு தோணறது. எப்படியும் அவர் காலம் முடியப்



போறது. அது இங்கேயே பழி இல்லாம முடிஞ்சுடட்டுமே, என்ன சொல்றேள்?'' என்றார் ராமபத்ரன்.

''பேசாம வாசல் பக்கம் ரேழியிலே படுக்க வைச்சுடலாமே!'' என்றான் பத்ரி.

''ஒண்டர்புல் ஐடியா!''

சிவசுத் தாத்தா முதலில் கத்திவிட்டுப் பிறகு புரிந்து கொண்டு அடங்கிவிட்டார். மேற்கொண்டு அவர் கத்தவில்லை. ஒதுங்கிவிட்டார். அடி மனசில் மட்டும் கனமாய் ஆதங்கம்! வயசாகி வியாதியும் சேர்ந்துவிட்டால் அப்பனாவது பிள்ளையாவது!

* * * * *

''குண்டு குண்டாய்ச் சேலத்து மாம்பழம் வந்திருக்கு சாமி!'' என்று போகிற போக்கில் குப்புசாமி குரல் கொடுத்துவிட்டுப் போனார்.

'மாம்பழமா! அதுவும் சேலத்து மாம்பழமா! அடடா, கற்கண்டாய் இனிக்குமே! ஒரு பழம் ரெண்டு ரூபாய் இருக்குமா? வாங்கித் தந்தால் தேய்ந்தாப் போய்விடுவீர்கள்?' குமுறினார் உள்ளுக்குள்.

பத்து நாள் முந்தியும் இப்படித்தான். ஏதோ ஆசை! ''மாலாடு பண்ணித் தரயாம்மா!'' என்று கேட்டார் கௌரியிடம்.

''ஆகட்டும் பார்க்கலாம். மாசக் கடைசில என்ன சாமானை வாங்கறது? ஒண்ணாந் தேதிக்கு மேல பார்க்கலாம்'' இருபதடி தள்ளி நின்றே பதில் சொல்லிவிட்டுக் கழுத்தை ஒடித்து அழகு காட்டிவிட்டு உள்ளே போய்விட்டாள். இப்படித்தான் அவருடைய விருப்பங்கள் ஒவ்வொன்றாய்ப் புறக்கணிக்கப்பட்டன.

ஒருக்களித்துப் படுத்துக் கொண்டார். மண் கலயத்தைச் சுற்றி ஐந்தாறு ஈ பறந்தது. லச்சி இன்னும் வரவில்லையே என்று நினைக்கும் போதே ''என்ன ஐயரே எழுந்துக்கறயா?'' என்ற சப்தம் கேட்டது. துடைப்பமும் கையுமாக லச்சி நின்றிருந்தாள். அவர் எழுந்து திண்ணையில் வந்து உட்கார்ந்தார்.

அவள் மடமடவென்று படுக்கையைச் சுருட்டி வைத்துவிட்டுக் கலயத்தைக் கொல்லையில் கொட்டி எரித்துவிட்டு அலம்பிப் புது மண் நிரப்பிக் கொண்டு வந்தாள். ரேழியைப் பெருக்கிப் ஃபினாயில் தெளித்துத் துடைத்துப் படுக்கையை உதறி விரித்துவிட்டு 'வா. ஐயரே படுத்துக்க'' என்றாள்.

சிவசு அவளையே உற்றுப் பார்த்தார்.

''என்ன சாமி பார்க்கறே?''

''நீ மட்டும் எப்படி அருவருப்பில்லாம இந்த வேலை செய்யறே? உனக்குப் பயமால்ல டீ. பி. வந்துடுமோன்னு?''

அவள் சிரித்தாள். ''அட போ சாமி! பயந்தா வவுறு ரொம்பிடுமா? சும்மாவா செய்யறேன்? ரெண்டு ரூபா காசு கிடைக்குதில்லே? எங்க பொழப்பே இதான சாமி! அருவருப்புப் பார்த்தா நடக்குமா? தினம் கக்கூஸ் அலம்பறதும், தெருக் குப்பை வார்றதும், ஆஸ்பத்திரி துணிங்களை துவைக்கறதும்... பாரேன் நான் நல்லாத்தான இருக்கேன்? என்னே வுடு சாமி! எங்கப்பாரு தொண்ணூறு வயசு வரைக்கும் திம்முனு இருந்தாரு இந்த வேலையைச் செஞ்சுக்கிட்டே! வியாதி வரதெல்லாம் விதி சாமி! தினம் குளிச்சுத் துண்ணூறு இட்டுக்கினை நீ! இன்னிக்குப் பாரேன் உம் பிள்ளைங்களே உன்னை ஒதுக்கி வெச்சிடுச்சு?''

''வாஸ்தவம்தான்! இருந்தாலும் என்ன தான் பணம் குடுத்தாக் கூட உன்னை மாதிரி அருவருப்புப் பார்க்காம செய்யறது கஷ்டம் தான்.''

''புகழாதே சாமி! நாளைக்கு எனக்கா வூட்டை எழுதி வெக்கப் போற? புடிக்காட்டாலும் ஒத்தாசை பண்ணுட்டியும் கூட புள்ளைங்களுக்குதான குடுக்க மனசு வரும்? ஏதோ நீ இருக்கற வரைக்கும் நா தினம் ரெண்டு ரூபா சம்பாதிப்பேன். அதான் நிஜம்! மத்தபடி எனக்கும் உனக்கும் என்ன சாமி பந்தம்?''

லச்சி துடைப்பத்துடன் போய்விட்டாள். ரொம்ப நேரத்துக்குப் பிரமை பிடித்தாற் போல் உட்கார்ந்திருந்தார் சிவசுத் தாத்தா. உண்மைதான். இவள் சொல்வது போல் இவளுக்கா வீட்டை எழுதிக் கொடுக்கப் போகிறேன்? மனசு வருமா அதற்கு? இல்லை தர்மத்திற்குத்தான் விட்டு விடுவேனா? நம் குடும்பம் நம் வாரிசுகள் நன்றாக இருக்க வேண்டும் என்றல்லவா சுயநலமாய் நினைக்கிறோம்? கேவலம் ரெண்டு ரூபாய்க் காசுக்காக ஒட்டிக் கொள்ளும் வியாதியைப் பற்றிக் கவலைப் படாமல் தொழிலைச் செய்யும் லச்சி ஒருநிமிஷத்தில் மனத்தில் உயர்ந்துதான் போய்விட்டாள். ஏனோ அவருக்கு ஒன்றும் பிடிக்கவில்லை. நல்ல ஆகாரங்கள் கிடைப்பதில்லை, அனுசரணை கிடைப்பதில்லை. குழந்தைகள் கூட அருகில் நெருங்குவதில்லை. என்ன வாழ்க்கை இது என்று சலிப்பு தட்டியது. என்ன உலகம், என்ன மனிதர்கள் என்று விரக்தி வந்தது. சீக்கிரம் போய்ச் சேர்ந்துவிட்













# அமிர்தாஞ்சன் அறியும் தலைவலியின் கடுமையை



எளிதாகப் பூசிட ஏற்ற மிருதுவான
அடிப்படைபொருள் கொண்டது.

புத்தம் புதிய, கார்க்கிறுகலான
உள் அமைப்பு மருந்தின்
சக்தியைப் பாதுகாக்கிறது.








1984 ஒலிம்பிக் போட்டி
இந்திய விளையாட்டு
வீரர்களுக்கு பெய்ன்-
பாம் சப்ளை செய்ய
அங்கீகாரம் பெற்றவர்கள்.

## அமிர்தாஞ்சன்

துரித நிவாரணம் உறுதியுடன் அளிப்பது.

தீய பின்விளைவுகள் இல்லாதது.






## பட்டுப்புடவைப் பரிசுத் திட்டம்

**போட்டி 45:**

ராஜீவுக்கு ஒரு அட்வைஸ் கொடுத்தீர்கள். இப்போது எம். ஜி. ஆரும் வந்து ஜம்மென்று பதவிப் பிரமாணம் ஏற்று விட்டார். அவருக்கு ஒரு யோசனை சொல்லுங்கள் பார்க்கலாம்! கீழே வெற்றிடத்தில் ஒரே ஒரு யோசனை மட்டும் எழுதி இந்த அரைப்பக்கத்தைக் கத்தரித்து அனுப்பவும். பிரசுரமானால் பரிசு. குலுக்கல் முறையில் ஒருவருக்குப் பட்டுப் புடவை. உறையின்மேல் "முதல்வருக்கு ஒரு யோசனை" என்று குறிப்பிடவும்.

முடிவு தேதி: 25.3.85

இன்னும் 8 பட்டுப்புடவைகளே பாக்கி. வாய்ப்பை நழுவ விடாதீர்கள். எல்லாப் போட்டிகளிலும் கலந்துகொள்ளுங்கள்!

என் பெயர்:.................

விலாசம்:.................

.................

டால் நல்லது என்று தோன்றியது. மறுநாள் என்னவோ தோன்ற பழைய டிரங்குப் பெட்டியைக் குடைந்தார்.

அவருடைய அப்பா செத்த போது மாமனார் வீட்டில் போட்ட மோதிரம். ஏற்கெனவே கையில் ஒரு மோதிரம் இருந்தபடியால் அப்படியே முடிந்து வைத்திருக்கிறார். மறந்தே விட்டார். நல்ல காலம் யாரும் பெட்டியைக் குடையவில்லை! இல்லையென்றால் எடுத்துக் கொண்டிருப்பார்கள். இப்போது கையில் மோதிரம் எதுவுமில்லை. போட்டுக் கொள்ளலாமா? ச்சே, பார்த்தால் கேட்டுவிடுவான்கள். அவருக்குச் சட்டென்று ஒரு எண்ணம் தோன்றியது. மோதிரத்தை மறுபடியும் பெட்டிக்குள் பத்திரமாய் வைத்தார்.

"இன்னும் எத்தனை நாள் இந்தக் கெழத்தோட மாரடிக்கணும்னு என் தலைலே எழுதியிருக்கோ" ஆத்திரத்துடன் டக்கென்று கஞ்சிப் பாத்திரத்தை வைத்து விட்டுப் போனாள் கௌரி. அவள் வார்த்தைகள் அவர் மனத்தைப் பிறாண்ட ஆரம்பித்தது. கஞ்சியைக் குடிக்காமல் தூரக் கொட்டி விட்டுப் பாத்திரத்தைக் கவிழ்த்தார்.

வாசலில் லச்சி வந்து நின்றாள்.

அவர் அவளுக்கு வழிவிட்டார். அவள் மடமடவென்று தன் வேலையை முடித்தாள்.

'கொஞ்சம் இரு' என்று அவளிடம் ரகசியமாய்ச் சொன்னார். டிரங்குப் பெட்டியைத் திறந்து அதை வெளியில் எடுத்தார். "இந்தா வாங்கிக்கோ, யார்கிட்டயும் சொல்லாதே. என்னால் முடிஞ்சது இதுதான். வித்துப் பணமாக்கிக்கோ. ஒரு சவரன் இருக்கும்..." லச்சி, பிரமித்து நின்றுவிட்டாள். "என்ன சாமி இது?..."

"பேசாத சீக்கிரம் போயிடு." துரத்தினார்.

அவள் போய்விட்டாள். அவர் தனக்குள்ளே பேசிக் கொண்டார். "நா சாகணும்னு தீர்மானம் பண்ணிட்டேன். பாவம் உனக்கு உன் ரெண்டு ரூபா சம்பாத்தியத்துல மண்ணு விழும்! தானா சாவு எப்ப வருமோ, தெரியலே. அதான் நானா சாகத் தீர்மானம் பண்ணிட்டேன். அதான் உனக்கு நஷ்ட ஈடு கொடுத்து விட்டேன்" மனத்திற்குள் நினைத்துக் கொண்டார்.

இரவும் கஞ்சி குடிக்காமல் தூரக் கொட்டினார். இரண்டு மூன்று நாள் அப்படியே கொட்டினார். பசி வயிற்றை அடைக்கக் கண் இருட்டிக் கொண்டு வந்தது. மூக்கைப் பிடித்துக் கொண்டு பலங்கொண்ட மட்டும் மூச்சை அடக்கினார். அடங்கிவிடு! சுவாசிக்க வேண்டாம்... சீக்கிரம் அடங்கிவிடு. நுரையீரலில் திடீரென்று புழுக்கம்! இறுதியில் நுரையீரலும், இதயமும் தோற்றுப் போய் அடங்க ஆரம்பித்தன. மறு நாள்!

"என்னன்னு ஓடி வாங்களேன் மாமாவைப் பாருங்களேன்" என்று கத்தினாள் வாசல் தெளிக்க வந்த கௌரி.

திமுதிமுவென்று எல்லோரும் ஓடிவந்தனர். ராமபத்திரன் அருகில் சென்று அப்பா என்றழைத்தபடி தோளை இலேசாகக் குலுக்க உடம்பு குப்புறச் சரிந்தது.

உங்களுக்கு பாராட்டுக்கள் சார்! ஆமா, சாப்பாடு, தண்ணி கொடுக்காமத்தானே இந்த பயங்கரவாதிகளை அடிபணிய வச்சீங்க?

அது இல்லே விஷயம்! அவுங்களுக்கு டார்டாய்ஸ் கொசுவர்த்திச் சுருள் கொடுக்கிறதை நிறுத்திட்டேன். கொசு அவுங்களை வாட்டி எடுத்திருச்சு.

டார்டாய்ஸ் கொசுவர்த்திச்சுருள்
உபயோகித்து, கொசுக்களை வாட்டி விரட்டுங்கள்.

# டார்டாய்ஸ் கொசு வர்த்திச் சுருள்





தயாரிப்பாளர்:
பாம்பே கெமிகல்ஸ் ப்ரைவேட் லிமிடெட்
:போர்ட், பம்பாய்-400 023. :போன்: 273831

everest/85/BCL/4-tm.

தமிழ்நாடு மற்றும் பாண்டிச்சேரிக்கு விநியோகஸ்தர்கள்: ஷாந்திலால் பிரதர்ஸ்,
7 காசிச் செட்டி சந்து. இரண்டாவது மாடி, சென்னை—600 001 போன்: 32886.

# நிஜங்களின் தரிசனம்

—இரவு வானத்தின் இடதுபுறத்தில் ஒதுங்கிக் கிடந்த அந்த ஒற்றை நட்சத்திரம் இவனைப் பார்த்துக் கேலியாகச் சிரித்தது— 'நீயெல்லாம் ஒரு ஆண் பிள்ளையா... மாட்டுக்கு போலே மனக்கேதுக்கு மீசை... அழகுக்கா, ஆண்மைக்கா? பேசாமல் அதை மழிச்சிட்டு ஒரு புடவையைச் சுற்றிக்க... ஏண்டா, உன் கண்ணெதிரிலேயே எவனோ ஒரு தடிமுண்டம் உன் மனைவியின் கையைத் தொடுறான்... அதைப் பார்த்தும் நீ கண்ணைக் கோட்டானாட்டம் முழிச்சிட்டு நின்னியே, அது ஆண்பிள்ளைக்கு அழகா...?'

—'அவன் ஒண்ணும் வேணுமின்னே என் மனைவியின் கையைத் தொடலே... கர்சீப்பை வாங்குறப்போ யதார்த்தமாய்த்தான் அவன் கை லெட்சுமியின் கைமேல பட்டுது!'

—'என்னது யதார்த்தமாவா!... அநாவசியமாப் பொய் சொல்லாதே... நான்தான் கண்கொட்டாமப் பார்த்திட்டிருந்தேனே... அவன் வேணுமின்னேதான் உன் மனைவி—என்ன பேர் சொன்னே, ம், லெட்சுமியோட கையைத் தொட்டுக் கர்சீப்பை வாங்கினான்... நீ சொல்ற மாதிரி அவன் யோக்கியனாயிருந்தா நீ நீட்டின கர்சீப்பை வாங்கியிருக்கலாமே?'

—அந்த நட்சத்திரம் கேட்ட கிடுக்கிப்பிடிக் கேள்வியில் இவன் பதில் சொல்ல முடியாமல் திணறிப் போனான். அதைப் பார்ப்பதைத் தவிர்த்துத் தலையை நத்தை மாதிரி பஸ்ஸுக்குள் இழுத்துக் கொண்டான். பக்கத்தில் உட்கார்ந்திருந்த லட்சுமியைப் பார்த்தான்..

—அவளது முடிக்கற்றை ஒன்றை, சன்னல் வழியே நுழைந்த காதல் காற்று அவளின் நெற்றி மேட்டில் அலைய வைத்ததைப் பார்க்க அழகாயிருந்தது.

—அவள் சகஜமாய்த்தானிருந்தாள். தூய முழு நிலவு போல் அவள் முகம் நிஷ்களங்கமாய் இருந்தது. அப்படியெனில் அந்த அந்நியனின் ஸ்பரிசம் அவளை எந்தவிதத்திலும் பாதிக்கவில்லையோ?

—இல்லையே, அவன் கைபட்டதும் நெருப்பு சுட்டதுபோல் விதிர்த்திட்டுத் தலை கவிழ்த்தாளே!... இப்போது அந்தப் பாதிப்பு சிறிதுமின்றிச் சகஜமாயிருக்க இவளால் எப்படி முடிகிறது?... ஒருவேளை இவளும் அந்த ஸ்பரிசத்தை விரும்பி ஏற்றிருப்பாளோ?

—''என்னங்க, என்னையே பார்த்திட்டிருக்கீங்க?''—லெட்சுமி நெருங்கிக் காதோரத்தில் கிசுகிசுத்தாள்.

—''ஒண்ணுமில்லே... எத்தனை பேர் நின்னுகிட்டு 'ட்ராவல்' பண்றாங்க பார்த்தியா... நல்லவேளை, அந்த ஆள் 'சீட்' போட்டிருக்காட்டி இந்நேரம் நீயும் நானும் நிற்க வேண்டி வந்திருக்கும்!''

—''ஆமாங்க... ரொம்ப நல்ல மனிதர்!''

—'நல்ல மனிதராம்... பொறுக்கி, சந்தடி சாக்கில் புது ஸ்பரிசம் தேடுற பொறுக்கி!'—என்று மனத்திற்குள் நினைத்தபடி, ''நானுஞ் சும் நின்னுக்கிட்டே வந்திடுவேன்... இந்த நிலைமையில் உன்னால் நிற்க முடியுமா?'' என்று கேட்டான்.

—''எந்த நிலைமையாம்?''

—''பஸ்ஸமாயிருக்கேன்னு பார்க்கிறேன்... இல்லாட்டிப் பச்சையாப் பதில் சொல்லுவேன்... ஏண்டி, நீயும் நின்னுக்கிட்டு வந்து—இந்த பஸ் போட்டு உலுக்குற உலுக்கலில் பல ராத்திரி கஷ்டப்பட்டு உன் வயிற்றில் நான் வரைஞ்சிருக்கிற அந்த 'நான்கு மாத ஓவியம்' கலைஞ்சிப் போயிடுச்சின்னு... சத்தியமா என்னால் அந்தச் செய்தியைத் தாங்கிக்க முடியாதும்மா!''

—''என்னால மட்டும் தாங்க முடியுமாக்கும்?''

—மீண்டும் ஒற்றை நட்சத்திரம் இவனைப் பார்த்துப் பிரகாசமாய்ச் சிரித்தது— 'என்னவோ பெண்டாட்டி மேலே பாசமாயிருக்கிற மாதிரி ஏண்டா இப்படி வேஷம் போடுறே?... உன் மனசில இருக்கிற சூட்சுமம் எனக்குத்தானே தெரியும்?'

—'கொஞ்ச நாழி என்னைத் தொல்லை பண்ணாம இரேன்... ஊர்ப் போய்ச் சேர்ந்ததும் அவகிட்டே நிச்சயமா இதைப் பற்றிக் கேட்பேன்!'—மீண்டும் பஸ்ஸுக்குள் முகம் திருப்பிய இவன் மனத்தில் சற்றுமுன் மன்னார்குடிப் பேருந்து நிலையத்தில் நடந்த நிகழ்ச்சி மறு ஒளிபரப்பாகியது....

• • • • •

கூடவாசலில் உறவுக்காரத் திருமணம் ஒன்றிற்குச் சென்றுவிட்டு இவர்கள் ஊர் திரும்ப நேரமாகிவிட்டது. இதுபோன்ற விசேஷங்களில்தானே துண்டித்துப்போயிருக்கும் உறவுகளைப் புதுப்பித்துக்கொள்ள முடிகிறது?

—மன்னார்குடி வந்தடைந்த போது இரவு மணி எட்டுக்கு மேலாகிவிட்டது. அதற்கு மேல் இவனது சொந்த ஊரான வீரமாநகருக்கு ஒரு பஸ்தானிருந்தது. வெள்ளச் சேதத்தில் வீடிழந்து நிற்பவர்களுக்குக் கிடைத்த உணவுப் பொட்டலம் மாதிரி, கூட்டம் அதை நோக்கி 'ஙொய்' என்று ஓடியது. இவனும்

பட்டுக்கோட்டை ராஜா

ஓடிச் சென்று பஸ் பக்கத்தில் நின்று பரபரத்தான். நவக்கிரஹங்களை ஒழுங்காய் ஒன்பது முறை சுற்றுதவன் பஸ்ஸைச் சுற்றிச் சுற்றி வந்தான்.

—"டிக்கெட்டெல்லாம் இறங்கினதுக்கு அப்புறம் ஏறுங்க... ஆம்பிளையெல்லாம் பின் கேட் வழியாத்தான் ஏறணும்!" — கண்டக்டரின் கட்டளை காற்றில் மிதந்து வர, அதுவரை முன் கேட்டில் முட்டிக் கொண்டிருந்த சில வேட்டிகள் பின் கேட்டுக்கு ஓடி வந்தன.

—"லெட்சுமி, உன்னால நின்னுகிட்டு வர முடியாதில்லையா... இப்போ என்ன செய்யறது?" — கையோடு மனத்தையும் சேர்த்துப் பிசைந்த இவனுக்கு திடீரென்று ஒரு யோசனை...

—"ஹலோ சார், இந்தாங்க ஹேண்ட் பேக்... எங்காவது சீட் போடுங்களேன்?"— என்று தலையை எக்கி, இறங்கப் போன ஒருவனிடம் வேண்டினான்.

—அவனும் இவனது பேக்கை வாங்கி ஒரு சீட்டில் வைத்துவிட்டுத் திரும்பிய போதுதான் லெட்சுமியும் இவனோடு நிற்பதைக் கவனித்திருப்பான் போலும் — "ஏன் சார், ரெண்டு சீட் போடணுமா, அப்படின்னா ஒரு கர்சீப் கொடுங்க!" என்று இவனிடம் கேட்டான்.

—இவன் தன் பைக்குள்ளிருந்து கர்சீப்பை எடுத்து நீட்டுவதற்கும், லெட்சுமி தனது கர்சீப்பை நீட்டுவதற்கும் சரியாயிருந்தது. ஆனால் அவன் லெட்சுமியின் கர்சீப்பைத்தான் வாங்கினான். சாதாரணமாய் வாங்கியிருந்தால் கூடப் பரவாயில்லை. வேண்டுமென்றே அவள் கையைத் தொட்டு வாங்கினான்.



—அதைப் பார்த்த இவனுக்கு எக்கச்சக்கமாய்க் கோபம் வந்தது நிஜம். ஆனால் ஊர் போகும் அவசரமும், அவன் செய்த உதவியும் இவன் உணர்ச்சிகளைக் கட்டிப்போட்டு விட்டன!

* * * * *

—இரவு படுக்கையில் இவன் லெட்சுமியின் கையோடு தன் கையைக் கோர்த்துக் கொண்டு இப்படிக் கேட்டான் — ''லெட்சுமி, நான் கேட்கிற கேள்விக்கு மறைக்காமப் பதில் சொல்லணும்... இதற்கு முன் இதே மாதிரி எந்த ஆணாவது உன் கையைப் பிடிச்சிருக்கானா?''

—''ஓ, எங்கப்பா நான் சின்னப் பிள்ளையா இருக்கிறப்போ இப்படிக் கையைப் பிடிச்சித்தான் கடைத் தெருவுக்கு அழைச்சிட்டுப் போவாரு!''

—''ஏய், நா ஸீரியஸாக் கேட்கிறேன்... நீ விளையாடிட்டே இருக்கே... ஒழுங்காப் பதில் சொல்லு!''

''நீங்க சுற்றி வளைச்சிப் பேசாமே நேரடியாய்த்தான் கேளுங்களேன்?''

—''சரி, நேரடியாவே கேட்கிறேன்... பஸ் ஸ்டாண்டில் அந்தப் பொறுக்கிப் பய கர்சீப் வாங்குகிற சாக்கில் உன் கையைத் தொட்டானே, அப்போ உனக்கு அருவருப்பா இல்லையா?''

—''நீங்க அதைக் கேட்கறீங்களா... யதேச்சையாய்த்தானே அவர் கை என் மேல பட்டுது... அதை நா அப்பவே மறந்திட்டேன்... நீங்க இன்னுமா நெனச்சிக்கிட்டிருக்கீங்க... சரியான சந்தேகப் பிராணியா இருப்பீங்க போலிருக்கே... ரோஷமுள்ள ஆம்பிளையா இருந்தா அந்த இடத்திலேயே அவனை நீங்க அடிச்சிருக்கணும்!''

—''என்னடி சொன்னே?'' என்று கத்தியவனுக் கையை ஓங்க...

* * * * *

—''என்னங்க, பஸ்ஸிலேயே இப்படித் தூங்கறீங்க... நாம இறங்க வேண்டிய 'ஸ்டாப்பிங்' வந்திடுச்சி!'' என்று லெட்சுமி உசுப்பினாள்.

—''தூக்கமா, ஒரு கனவே கண்டு முடிச்சிட்டேன் போ... சரி எழுந்திரு!'' என்று எழுந்தவன் ஹேண்ட் பேக்கைத் தோளில் மாட்டிக் கொண்டு, — ''கண்டக்டர் சார், அந்த முச்சந்தியில் இறங்கணும்... கொஞ்சம் நிறுத்துங்களேன்!'' என்று கூட்டத்தை மீறி ஓங்கிக் குரல் கொடுத்தான்.

—கண்டக்டர் விசில் கொடுக்க பஸ் நின்றது. அதிகம் பேர் அந்த இடத்தில் இறங்கினார்கள். 'ஃபுட் போர்டை' அடைய மக்கள் வெள்ளத்தில் நீச்சலடிக்க வேண்டியிருந்தது!

—இவன் ஃபுட்போர்டில் கால் வைத்த போதுதான் எதிர்பாராத அந்தச் சம்பவம் நிகழ்ந்தது. இவனுக்கு முன்னால் இறங்கிய அந்த நடுத்தரவயதுக்காரி புடவை தடுக்கிக் கீழே விழப் போனாள்...

—இவன் மூளை துரிதமாகச் செயல்பட்டது. சமயோசிதமாய்ச் சட்டென்று இவன் அவள் கையைப் பற்றிக் கீழே விழாமல் காப்பாற்றினான்!

—பயம் மாறாத விழிகளில் அவள் மிரண்டு விழிக்க,

—''பார்த்து இறங்கினா என்னம்மா?'' — கண்டக்டர் 'ஷட்டர்' வழியே தலையை நீட்டி கேட்டுவிட்டு விசில் கொடுத்தார். பஸ் நகர்ந்தது. அந்தப் பெண்ணும் இவனை நன்றியோடு ஒரு பார்வை பார்த்துவிட்டுத் தன் கணவனோடு நகர்ந்தாள்.

—''நல்ல வேளையாப் போச்சுங்க... நீங்க சரியான நேரத்தில் கையைப் பிடிச்சிருக்காட்டி அந்த அம்மா தலைக்குப்புற விழுந்திருக்குமில்லையா?'' என்று லெட்சுமி கேட்டாள்.

—அந்தச் சுபாவமான கேள்வி சாட்டையடியாய் இவன் மனத்தில் விழ மௌனமாய் நடந்த இவன், தன்னைக் கேலி செய்த அந்த ஒற்றை நட்சத்திரத்தை வானத்தில் தேடினான்...

—அதுவும் மறைந்திருந்தது!



''எலே! சீட்டாடறது தப்பு... ஒருநாள் கொஞ்சம் வரும். அடுத்த நாள் நிறையப் போகும்... தெரிஞ்சுதா?''

''அப்படியா அப்பா? சரி இனிமே ஒரு நாள்விட்டு ஒருநாள் ஆடறேன்!''

''மாப்பிள்ளை ஊர்வலக் கார் டிரைவர் இதற்குமுன் கார்ப்பரேஷன் லாரி டிரைவரா இருந்திருப்பாரோ? ஒவ்வொரு குப்பைத் தொட்டிக்கும் நேராக் காரை நிறுத்திடுறாரே...!''



## போபால் விபத்து — ஒரு மறுபார்வை



பார்வதிக்கு வயது இருபத்தெட்டு தான். ஆனால் பத்து வயது கூடிப் போன மாதிரி இருந்தாள். கன்னம் ஒட்டி, உலர்ந்து பஞ்சத்தில் அடிபட்டவள் மாதிரி இருந்தாள். யூனியன் கார்பைட் தொழிற்சாலையை அடுத்திருந்த ஜெயப்பிரகாஷ் நகரில் ஒற்றை அறை ஜாகையின் வாசலில், ஒரு வயதுக் குழந்தை அவள் புடவைத் தலைப்பை வாயில் வைத்துச் சப்பிக் கொண்டிருந்தது.

ஓர் அமெரிக்கக் கம்பெனி, பாதுகாப்பு விதிகளைக் கேலிக் கூத்தாக்கி, மெதில் ஐஸோசைனேட்டை ஒரு டிசம்பர் அதிகாலையில் வெளியேற்றிய போது, ஜெயப்பிரகாஷ் நகரின் பெயர் செய்தித்தாள்களில் ஏகமாய் அடிபட்டது. பார்வதியின் கணவன் ராஜ், அவர்களுடைய பன்னிரண்டு வயதுப் பையன் — இவர்கள் விஷக்காற்று மூச்சை அடைக்க இறந்த இரண்டாயிரம் பேரில் இருவர்.

அவர்கள் இரண்டு பேரும் உடனே இறக்கவில்லை. குடும்பத்திலுள்ளவர்கள் போபாலை விட்டுப் பதினைந்து மைல் தள்ளியிருக்கும் பெராசியாவுக்கு ஓடினார்கள். ஆனால் பையன் மட்டும் போபால் ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்ட உடனே இறந்து போனான். செய்தியறிந்து பையனின் சடலத்தை எரிக்க ராஜ் எடுத்துக் கொண்டு போக வர, அவனும் பெராசியாவுக்குத் திரும்பிய சற்று நேரத்தில் இறந்துபோனான்.

கிராமத்தில், தனிப்பட்ட முறையில் அப்பாவும், பிள்ளையும் எரிக்கப்பட்டுவிட்டதில், போபாலில் அவர்கள் சாவு பதிவு செய்யப்படவில்லை. அரசு தயாரித்த கம்ப்யூட்டர் பட்டியலிலும் அவர்கள் இருவர் பெயரும் இல்லை.

பார்வதியும், தப்பிப் பிழைத்த இரண்டு குழந்தைகளும், இப்படிப் பெயர்கள் விடுபட்டுப் போனதன் காரணமாய் அலையாய் அலைகிறார்கள். மத்தியப் பிரதேச அரசு இறந்தவர்கள் குடும்பத்துக்கு உதவித்தொகை வழங்கத் தொடங்கிவிட்டாலும், பார்வதிக்கு இன்னும் எதுவும் கிடைக்கவில்லை. அதிகார வர்க்கம் என்ற சுழலில் சிக்கித் தவிக்கிறாள்; அந்தப் பெருவெளியில் திக்குத் திசை தெரியவில்லை. மாநில அரசு தானியங்களை இலவசமாக வழங்குகிறது. தனிப்பட்ட அமைப்புக்கள் உதவ முன்வந்திருக்கின்றன. ஆனால் நிரந்தர வருமானம் கொண்டு வரும் தலைவன் இல்லாத நிலையில், இந்த ரேஷன்கள் எப்படிப் போதும்?

பார்வதி அடங்கிப் போய்ச் சுருண்டு உட்கார்ந்திருக்கிறாள். அக்கம்பக்கத்திலுள்ள ஆண்கள்தான் அவள் கதையைச் சொல்லுகிறார்கள். "எத்தனை நாள்தான் இப்படிப் பிச்சை எடுத்தும் கடன் வாங்கியும் காலத்



தைத் தள்ளுவது? எங்கே புகார் செய்வது? என்று தெரியாமல், சுவர் சுவராகப் போய் முட்டிக் கொண்டு மூன்று மாதம் ஆகிவிட்டது!" என்று பார்வதி வெடித்துக் கதறி அழுகிறாள்.

அவளுடையது மட்டும் ஏதோ அலாதியான விவகாரம் அல்ல. எத்தனை பேர் இறந்தார்கள் என்று யாருக்குமே சரியாக எண்ணிக்கை தெரியாது. எரியூட்டிவிடுவதால் ஆதாரமும் இல்லாமல் போகிறது. பாதிக்கப்பட்ட மருத்துவ உதவி தேவைப்பட்ட — ஒன்றரை லட்சம் பேரில், ஆயிரக் கணக்

# துயரம் தொடர்கிறது



# வைட்டமின்கள்

தெம்பும்
உடல்
ஆரோக்கியமும்
பெற
சில துளிகளே
தேவை



கானவர்கள் வேலைக்குப் போகவே லாயக்கில்லாத நிலையில் இருக்கிறார்கள். பெரும்பாலானவர்கள் தினக்கூலி வாங்குபவர்கள். டிசம்பரிலிருந்து ஒரு பைசா கூட அவர்களுக்குக் கிடைக்கவில்லை.

* * * * *

சாந்தியின் நாலு குழந்தைகளுக்கு இன்னும் மோசமான நிலை. தகப்பனார் வீட்டை விட்டுப் போய் விட்டார். வயிற்றுப் பிழைப்புக்கு அம்மா சாந்தி ஆடைகள் தயாரிக்கும் பாக்டரியில் வேலை பார்த்து வந்தாள். டிசம்பர் நாலாம் தேதி அவள் இறந்து போனாள். வயதுக்குவந்த பெண், இரண்டு பையன்கள், ஒரு கைக்குழந்தை எல்லோரையும் விட்டு விட்டு.

இரு பையன்களில் ஒருவனை ஓம்பிரகாஷுக்கு அச்சகத்தில் வேலை. விஷ வாயு தாக்கியதில் கண்கள் பாதிக்கப்பட்டு, அவனால் வேலைக்குப் போக முடியவில்லை. சாந்திக்கும் இறந்து போன இன்னொரு குழந்தைக்குமாகச் சேர்த்து அரசு இருபதாயிரம் ரூபாய் நஷ்ட ஈட்டுத் தொகை கொடுத்தது. நல்லெண்ணத்தோடுதான் அதிகாரிகள் ஒரு வங்கியில் அதை டெபாசிட்டாகப் போட்டார்கள். குழந்தைகள் எல்லாம் 'மைனர்'கள் ஆயிற்றே என்று. இப்போது அவர்களால் அதில் ஒரு காசு கூட எடுக்க முடியாது!

அதிகாரிகள் அப்படியொன்றும் அசட்டையாயில்லை. மத்தியப்பிரதேச முதலமைச்சர் அர்ஜுன்சிங் வட்டாரத்தின் கருத்துப்படி, போபாலில் சமீபத்தில் நடைபெற்ற நாடாளுமன்றத் தேர்தலில் காங்கிரஸ் வேட்பாளருக்குக் கிடைத்த மகத்தான வெற்றி, அர்ஜுன் சிங்கின் தயாள குணத்துக்கும், யூனியன் கார்பைட் நிறுவனத்திடம் அவர் காண்பித்த கறார் கண்டிப்புக்கும் கிடைத்த வெற்றி. இருந்தாலும், மனிதர்களின் தவறினால் இழைக்கப்பட்ட இந்த மகத்தான விபத்துக்கு அவர் ஈடு செய்துவிட்டார் என்று சொல்ல முடியாது. அரசின் பாதுகாப்புச் சட்ட விதிகள் என்னும் வலையில் பெரிய ஓட்டைகள் நிறையவே இருக்கின்றன...

மூன்று மாதங்கள் ஆகிவிட்டன. அமெரிக்க—இந்திய நீதிமன்றங்கள் உதவும் என்று இன்னும் எத்தனை காலம்தான் பாதிக்கப்பட்ட போபால் மக்கள் காத்திருக்க முடியும்?

**கார்டியன் மூலம்: எரிக் சில்வர்.**

**தமிழ் வடிவம்: எஸ். வி.**





# பாடும் வானம்பாடி

ஹிந்திப் படத்தைப் பார்த்துவிட்டு தமிழில் எடுப்பார்கள்தான். அதற்காக எந்தப் படத்தை எடுப்பது என்று ஒரு விவஸ்தை வேண்டாம்? அதுவும் முதல் முதலாய் டைரக்ஷன் பொறுப்பை ஏற்றுக்கொள்ளும் ஜெயக்குமார் சொந்தமாய் ஏதாவது யோசிக்கக் கூடாதா?

ஏழை டிரைவரை வஞ்சித்து ஜெயிலுக்கு அனுப்பிவிட்டு சொகுசான மாளிகையில் சந்தோஷித்திருக்கும் பாத்திரம் செந்தாமரைக்குத் தைத்த சட்டை மாதிரி பொருந்துகிறது. டிரைவரின் பிள்ளை எப்படி வளர்ந்து உலகப் புகழ் டிஸ்கோ டான்ஸராகி அவருடைய பெண்ணைக் காதலித்து படத்தை சுபமாக்குகிறான் என்பதே மையக் கதை. நாயகனின் தங்கை, நாயகியின் வில்ல அண்ணன், காதல், குழப்பம் எல்லாம் உண்டு.

இளம் வில்லனாய் ரவி. ஒரு டிஸ்கோ, கூட ஆடிய பெண்ணுடன் கொஞ்சல், மானேஜரோடு கோபம் என்று ஆரம்பத்திலேயே ரப்பரால் அழிக்கப்பட்ட பென்சில் சித்திரமாகி விடுகிறார். 'இன்னொரு டிஸ்கோ டான்ஸரை உருவாக்கிக் காட்டவில்லை என்றால் என் பெயர் ராஜா இல்லை' என்று சவால் விட்டு (மானேஜர்) ராஜீவ் காரில் கிளம்புகிறார். இரண்டு நாட்களிலேயே நடுரோடில் டிஸ்கோ பயிலும் (இதற்கெல்லாம் பயிற்சி வேறா?) ஆனந்த்பாபுவைக் காண்கிறார், அழைத்துப் போகிறார், சூப்பர் டான்ஸராக்குகிறார், எத்தனை சுலபம்!

எதிரி முகாமில் புது மானேஜராய் ஜனகராஜ். 'மிஸ்டர் **Bell**' என்று தன்னைத் தானே கூப்பிட்டுக் கொண்டு கேள்வி கேட்டுப் பதிலும் சொல்லிக் கொள்கிறார்— சிரிக்க முடிகிறது. ஆனந்த்பாபுவை ஆட விட்டாமல் ஒழிக்கிறேன், பார் என்று ரவி நிறைய பேசுகிறார். பாட்டில் பாட்டிலாய்க் குடித்துவிட்டு கையைக் காலை உதைத்துக் கொள்கிறார். உருப்படியாய் ஒரு திட்டம் கூடப் போடுவதில்லை. கதையில் அதனாலேயே பெரிய்ய தொய்வு விழுகிறது. 'எதுவுமே சாதிக்காமல் ஜனகராஜ் மானேஜராய் நிலைத்து நிற்பதின் தாத்பர்யமும் புரியவில்லை.

வெற்றிகரமான டிஸ்கோ டான்ஸராய்க் காட்ட இன்றைக்கு ஆனந்த்பாபுவை விட்டால் வேறு ஆளில்லைதான். இருந்தாலும் இந்த நாட்டிய கராத்தேயை இன்னும் எத்தனை நாளைக்குத் தான் பார்த்துக் கொண்டிருப்பது? மனிதர் பாவம், உடம்பை ஏகமாய் வருத்திக் கொண்டு முழங்கால், முழங்கை என்று தனித்தனியே தேய்த்திருக்கிறார். பாண்ட் கிழியாமல் ஆடுவதே ஒரு கலை! ஆனால் நடிக்கச் சொல்லும் போது மட்டும் மூச்சுத் திணறுகிறது. எலெக்ட்ரிக் கிடாரில் அபாய அளவு மின்சாரம் பாய்ச்சப்பட்டு ஆனந்த்பாபுவுக்குக் குறி வைத்திருக்க, அவருடைய அம்மா வந்து காப்பாற்றுகிறார். மேடையிலேயே உயிர் துறக்கிறார். இதை விடவா சந்தர்ப்பம் கிடைக்கும்? ஆனந்த்பாபு அம்பேல் என்று கோட்டைவிடுகிறார். முகத்தில் தேவையான அதிர்ச்சி இல்லை, சோகம் இல்லை. க்ளைமாக்ஸ் காட்சியில் கொஞ்சம் சமாளிக்கிறாரோ, ஆறுதலாயிருக்கிறதோ!

மேடையில் அதிர்ச்சி தாக்கி ஆடமுடியாமல் பாட முடியாமல் க்ளைமாக்ஸில் அவர் தத்தளிக்க, பழைய ஆசான் நாகேஷ் அவருக்குக் கொஞ்சம் கொஞ்சமாய் உற்சாகம் கொடுக்க, ஆனந்த்பாபுவுக்கு உணர்ச்சிகள் திரும்பும் கட்டத்தில் நல்ல நெகிழ்வு.

ஏகப்பட்ட ஸ்டண்ட் ஸீன்கள்! வில்லன்கள் சரியாய்ப் போராடாமலேயே உதை வாங்குகிறார்கள். ஆனந்த்பாபுவுக்கு, ஒரு குரங்கு, சண்டை போட பயிற்சி தரும் ஸீன் அமர்க்களமாயிருக்கிறது..

டிஸ்கோ என்று சௌகர்யமாய் சொல்லி விட்டதால் பாடல்களில் ராகம் வேண்டாம். எதுகை மோனை தேவையில்லை. கொஞ்சம் இனிமையாவது இருந்திருக்கலாம். இத்தனைக்கும் இரண்டு இசையமைப்பாளர்கள்: பப்பி லஹரி, சங்கர் கணேஷ்.

ஜீவிதாவைக் கூடப் பார்த்ததாய் ஞாபகம்.

# ராஜா யுவராஜா

இரட்டை வேடம் போட்டு, இருப்பதையும் கெடுத்துக் கொண்ட சில நடிகர்களை நமக்கு ஏற்கெனவே தெரியும். இதோ ஒரு தியாகராஜன். அண்ணன் — தம்பி. சரி, இரண்டு பேர் டப்பிங் கொடுக்கலாம், மற்றபடி வேறு வித்தியாசம்? அண்ணன் ப்ளஸ் தாடி. தம்பி மைனஸ் தாடி. கதையிருந்தால் தானே குழப்பம்? அதனால் கஷ்டமில்லை.

படுக்கையில் இருக்கும் அம்மா, பலவீனமான பசியில் தவிக்கும் தம்பி — இருவரையும் காப்பாற்ற முனையும் ஒரு அண்ணன் என்று படம் துவங்குகிறது. செந்தாமரை ஒரு பாங்கில் வந்து கொள்ளை அடிக்கும் போது (வெற்றிலைப் பாக்குக் கடையில் கொள்ளையடிப்பது கூட இன்னும் கஷ்டமாயிருக்கும்.) அண்ணன் இடற, அந்தச் சிறுவனைத் தன் தொழிலில், இழுத்துக் கொள்கிறார் செந்தாமரை. பத்து வயது இருந்தால் அதிகம். அவனிடம் 'நாம் சேர்ந்து கொள்ளையடிப்பதில் உனக்கு மூன்றில் ஒரு பங்கு' என்று அவர் ஆசை காட்டி அட்வான்ஸ் பணம் கொடுக்கும் போதே படத்தின் சீரியஸ்னஸ் ஈ என்று இளித்துவிடுகிறது.

'கோவில் சிலைகளைக் கொள்ளை அடிக்கிறார்களாம். பாத்ரூமில் ஒளித்துவைக்கிறார்களாம்: இன்னும் அடுக்கு அடுக்காய் சீட்டு மாளிகை. எல்லாமே ஸ்கூல் டிராமா மாதிரி இருக்கிறது.

அண்ணன் தியாகராஜன் ஹார்ட் பேஷண்ட். தம்பியை' வைத்துக்கொண்டு 'அம்மாவைக் கொன்றவர்களைப் பழிவாங்கினால்தான் என் ஆத்மா சாந்தியடையும்' என்று குரலெழுப்பிவிட்டு வாயோரம் ரத்தம் கக்கி அல்லது கக்காமல் மண்டையைப் போடுகிறார். இப்போது பொறுப்பு தம்பியின்மேல். அண்ணன் சொல்லும் 'பாஸ்' யார், எப்படி இருப்பார் எதுவுமே தெரியாமல் வேட்டையை ஆரம்பிக்க வேண்டிய கட்டாயம். ரொம்ப சுவாரசியமான முடிச்சுத்தான். ஆனால் மூளையைக் கசக்குவதில் படமெடுத்தவர்களுக்கு நம்பிக்கை இல்லை. சும்மா சும்மா ட்ரான்ஸ்மிட்டர் / ரிஸீவர் பொருத்திய வாட்சில் பேசிப் பேசியே காட்சிகளை இழுத்திருக்கிறார்கள்.

சண்டைக்காட்சிகள் எல்லாம் தண்ணீரில் ஊறப் போட்ட மாதிரி சவசவ டைப்.

பாதிநேரம் பாதி உடம்பைக் காட்டிக் கொண்டிருக்கும் சுனிதா திடீரென்று 'நான் போலீஸ் டிபார்ட்மெண்ட் ஆள்' என்கிறார்.

தம்பி தியாகராஜனுக்கு ஊர்வசி, அண்ணன் தாடிக்கு நிபா. காதலித்தவனைத் தேடி வந்த இடத்தில் அவன் உயிரோடு இல்லை என்று தெரிய வந்த பின்னும் அந்த வீட்டில் ஊர்வசி தங்குவது ஏன்? சிலைகளை வில்லன் எடுக்க வருவான் என்கிற நம்பிக்கையோடு போலீஸார் அவற்றைப் பாதுகாப்பான இடத்திற்கு எடுத்துச் செல்லாதது அபத்தமாயில்லை? இந்த மாதிரி ஏன், எதற்கு, எப்படிகள் ஏராளம்.

வைரக்கல்லை ஆடு தின்று விட்டது என்று எண்ணி பூசாரி கவுண்டமணி அதற்கு தெய்வ அந்தஸ்து கொடுக்க, ஆசீர்வாதம் வாங்கிப் போக க்யூ நீண்டு கொண்டே போகும் காட்சிகளில் கொஞ்சம் கலகல.

இரைச்சலான பின்னணி கீதம். உபயம்: புதிதாய் ஒரு பெல் சுரேந்தர். காமிரா — பாபுவாமே? உங்கள் முத்திரையெல்லாம் எங்கே, பாபு?

ஹலோ டைரக்டர் சார், தியாகராஜன் மீது முதலீடு செய்வதானால், முதலில் மம்பட்டியான் அளவுக்கு ஒரு கதையைத் தேடுங்கள்.

—ஜெயமன்மதன்.





**75. கே. பி. எஸ். கிருஷ்ணக்கண்ணன், காரமடை.**

**தாங்கள் ஒரு எழுத்தாளர் என்பதை, 'தாயம்' என்ற கதை மூலம் தெரிந்து கொண்டேன். தங்கள் மனத்தில் நீங்கா இடம் பெற்றுள்ள தமிழ் எழுத்தாளர் யார்?**

'தாயம்' என்ற கதை மூலம் நான் எழுத்தாளன் என்பதைத்தான் தெரிந்து கொண்டீர்கள். 'நல்ல' என்ற வார்த்தை இல்லாததனால் விமர்சனத்தை அதிலிருந்தே புரிந்து கொண்டேன்! என்னுடைய மனதில் நீங்காத இடம் பெற்ற எழுத்தாளர் பற்றிச் சொல்ல வேண்டும், இல்லையா? எழுத்தாளர் என்று சொல்ல வேண்டாம். ஏன் என்றால் அந்த விஷயத்தில் நான் ஏக எழுத்தாளிராக விரதம் கொண்டவனாக இருக்க விரும்பவில்லை...

தி. ஜானகிராமன் அவர்கள் முக்கியமாக, நீங்காத இடம் பெற்றவர் — உரை நடை எழுத்தாளர்கள், நாவலாசிரியர் என்று வைத்துக் கொண்டால், அதை மட்டுமே பார்ப்போம். இறந்தவர்களை மட்டுமே பெருமைப்படுத்திச் சொல்லும் வழக்கம் நமக்கு எல்லோருக்குமே உண்டு — அதாவது, இருக்கும்பொழுது பாராட்டாமல் இருப்பது! நான் அப்படியெல்லாம் சொல்ல மாட்டேன்... லா.ச. ராமாமிருதம், பாலகுமாரன் — என்னுடைய நண்பர், திரு. சுஜாதா அவர்கள். இப்படி சொல்லிக் கொண்டே போகலாம்... ஆனால் இவர்கள் தான் பளிச்சென்று என் மனத்தில் இருக்கக்கூடிய எழுத்தாளர்கள்.

**நேரம் நல்ல நேரம்**

**76. பி. ஜெயராஜ், சித்தூர் (ஆந்திரப்பிரதேசம்).**

**நீங்கள் பிரதமராக ஆனால், உங்கள் முதல் நடவடிக்கை என்னவாக இருக்கும்?**

கற்பனைதானே! சரி... அதைப் பற்றி நினைத்துப் பார்க்கிறதில் தப்பு இல்லை. அப்படி ஒரு துரதிர்ஷ்டம் இந்த நாட்டைப் பிடித்துக் கொள்ளுமே ஆயின், நான் முதலில் செய்யும் வேலை, ஒரு சினிமாக்காரனாக இருந்தவன் என்ற முறையில்—

'சினிமாவை 'நேஷனலைஸ்' பண்ணிவிடுவேன்!'

# கமல் பதில்கள்

**77. எஸ். மரகதம்; பூவளூர்.**

**மனித சக்திக்கு அப்பாற்பட்ட சக்தி உலகில் உண்டு என்பதை நீங்கள் நம்புகிறீர்களா?**

ஏன், நம்பாமல் என்ன? சாதாரணமான ஒரு விஷயம்தானே! மனித சக்திக்கு அப்பாற்பட்ட சக்திதான் நியூக்ளியர், எலக்ட்ரிசிடி

போன்ற சக்திகள். அதையே நாம்ப இன்னும் தாண்டலே. அதுக்கப்புறம் அடுத்ததைப் பற்றிப் பேசுவோம்!

**78. ஆர். செல்லப்பா, திருச்சி—20**
**நீங்கள் வேறு எந்த துறையிலாவது பிரவேசித்திருந்தால் இப்படி பிரபலமாக இருந்திருப்பீர்கள் என்று நினைக்கிறீர்களா? ஏன்?**

இருப்பேன் என்றுதான் நினைக்கிறேன். அதற்குக் காரணம், நான் சில வாரங்களுக்கு முன்னால் நடந்த நிகழ்ச்சியில் பதில் சொல்லும்போது என் தாயார் சொன்னதைக் குறிப்பிட்டேன். அவர் சொன்னது இதுதான்: 'நீ வெறும் குப்பைக் கொட்டும் தொழிலுக்குத்தான் போகிறாய் என்றாலும், உலகத்தில் மிகச் சிறந்த குப்பை கொட்டுபவனாக இருக்க வேண்டும்!' என்று சொன்னார். அப்படி ஒரு தாயின் அறிவுரையில் வளர்ந்திருப்பவன் என்பதனால், வேறு எந்தத் தொழிலுக்குச் சென்றிருந்தாலும், அந்தத் தாயின் அறிவுரையைப் பின்பற்றித்தான் நடந்திருப்பேன். முயற்சியாவது செய்திருப்பேன். ஆக, இருக்கும்பொழுது இல்லையென்றாலும் அந்தத் தொழிலை விட்டுவிட்டு நான் சென்ற பிறகாவது பாராட்டும் ஒரு நிலையை ஏற்படுத்தி விட்டுத்தான் போவேன் என்ற ஒரு நம்பிக்கை எனக்கு இருக்கிறது.

**79. கே. எஸ். நாகராஜன், சென்னை—23.**
**பால்முனி என்ற ஆங்கில நடிகர் ஆறே படங்களில் நடித்து அழியாப் புகழ் பெற்று, அவரது புகழை இன்னும் பேசும்படி வைத்திருக்கிறார். ஆனால் அதிக எண்ணிக்கை உள்ள படங்களிலே நம் நடிகர்கள் நடித்தாலும், நமக்கு ஆஸ்கார் பரிசு கிடைக்காததற்கு என்ன காரணம்?**

இந்த ஆஸ்கார் பரிசு என்று சொல்லப்படுவது மிகச் சிறந்த பரிசு. அமெரிக்கர்கள் நடத்தும் ஒரு பரிசு விழாவில் தரப்படுவது. அமெரிக்கா தற்போது உலக நாடுகளில் மிகச் சிறந்த நாடு என்று நாம் கருதுவதனால் அந்தப் பரிசையும் பெரிதாக நினைத்துக் கொள்ளுகிறோம். நாளைக்கே இந்தியா அமெரிக்கா அளவுக்கு உயர்ந்துவிட்டது என்றால், இங்கே கிடைக்கும் இந்த கோல்டன் பீகாக் அல்லது தங்கத் தாமரையே ஒரு பெரிய விஷயமாகி விடும். அதிகப் படங்களில் நடிக்கும் நடிகர்கள் அந்த நிலையை எய்தாதது போல் கேள்வி கேட்டிருக்கிறீர்கள். சிவாஜி அவர்கள் இருநூறு படங்களுக்குமேல் நடித்திருக்கிறார். அப்படி இருக்கும்பொழுது, ஆசியாவிலேயே சிறந்த நடிகர் என்ற பட்டத்தையும் வாங்கியிருக்கிறார். நிறையப் படங்களில் நடிப்பதும் நடிக்காததும் அவரவர்கள் வசதியைப் பொறுத்தது. தெம்பு இருந்தால் நிறைய படங்களில் நடிக்கலாம். உங்களுக்கு, காண்பிக்க நிறைய முகங்கள் இருந்தால் நிறைய படங்களில் நடிப்பது சாத்தியமே. அதற்கான திறமை சிவாஜிகணேசனுக்கு இருந்தது; செய்தார். பால்முனிதான் உயர்ந்தவர்; இவர்கள் தாழ்ந்தவர்கள் என்று சொல்ல முடியாது. நமக்குக் கிடைக்கும் வசதிகளை வைத்துக் கொண்டு பேப்பர் ஒட்டிய ரிஃப்ளெக்டர்களை வைத்துக்கொண்டு நாம் செய்யும் சினிமா; எந்தவிதத்திலும் அமெரிக்கர்களின் தொழில் நுட்ப பக்க பலங்களுடன் செய்யும் சினிமாவைவிடக் குறைந்துவிடாது. தொழில் நுட்பத்தில் நாம் பின்தங்கியிருப்பதற்குப் பல காரணங்கள் இருக்கின்றன. நாம் செய்யும் டெரிலின் சட்டை, அமெரிக்கர்கள் செய்யும் டெரிலின் சட்டைக்கு ஈக்வலாக இருக்க முடியாது என்பதற்குக் காரணம் நாம் சோம்பேறிகள் என்பதல்ல. நம் நாட்டில் இருக்கும் பொருளாதார நெருக்கடியும் இப்போதிருக்கும் சில சூழ்நிலைகளும்தான் காரணம். அதற்கு நடிப்புத் துறையும், சினிமாத்துறையும் விதிவிலக்கு அல்ல.

* * *

பதில்களைக் கேட்டு 'போர்' அடித்துப் போன சில ரசிகர்களிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டுவிடுகிறேன். எனக்கு இந்த மாதிரி அதிகம் பேசிப் பழக்கமில்லை. விழாவில் நன்றி சொல்லும் ஒரு சந்தர்ப்பத்திலும் மைக்கில் நான் தொண்டையைக் கனைத்துக் கொள்ளும் நேரம் தான் பாதிநேரம். பாக்கி நேரம், பெயர்களைக் கூட மாற்றி மாற்றிச் சொல்லித் தடுமாறிவிடுவேன். ஆனால் என்னவோ தெரியவில்லை. 'கல்கி'க்காகச் செய்த இந்த ஒரு புரோகிராமில் தடுமாற்றம் இல்லாமல் வந்தது. அதற்குக் காரணம் கேள்விகளின் பலம்தான் என்று நான் நினைக்கிறேன். இந்தக் கேள்விகள் கேட்ட ரசிகர்களுக்கும், இந்த வாய்ப்பை எனக்கு அளித்த 'கல்கி' பத்திரிகைக்கும், நல்ல குரலில் கேள்விகளைக் கேட்ட திரு. எஸ். வி. ரமணனுக்கும் என் நன்றியைச் சொல்லிக்கொண்டு விடைபெறுகிறேன். வணக்கம்.

தொகுப்பு: சித்தார்த்.

**ராகமாலிகா வழங்கும் பட்டுப்புடவையைக் குலுக்கல் முறையில் பரிசாகப் பெறும் அதிர்ஷ்டசாலி:**

**ஆர். சம்பத்,**
**B—3, 277, பி.எச்.இ.எல். டவுன்ஷிப்,**
**திருச்சி—620 014.**

மேலட்டையில்:
குமாரி அகிலா குமார்
வண்ணப்படம்: ஜே. டி. ஜானி.

## 20

ஈஸ்ட்ஹாம் முருகன் கோவிலில் சொற்பொழிவு செய்த பின்பே லண்டன் தமிழ்ச் சங்க நிகழ்ச்சியும், ஹைகேட் ஆலய நிகழ்ச்சியும் அமைந்தன. கென்ஸிங்டன் — மேற்கு — பகுதியில் இருந்த பாரதீய வித்யா பவன் இந்தியாவின் கலாச்சாரக் கேந்திர மாக லண்டனில் விளங்குகிறது. ஓர் அறை யில் நாலைந்து வெள்ளைக்காரர்கள் டாக்டர் நந்தகுமாரிடம் சமஸ்கிருதம் கற்றுக் கொண் டிருக்கிறார்கள். இன்னோர் அறையில் நாட்டி யம் கற்பிக்கப்பட்டுக் கொண்டிருந்தது. வேறோர் அறையில் சிதார். மற்றொரு பகுதி யில் இந்திய இசை. பேஸ்மெண்டில் நிரந்தர மான இந்தியக் கலாச்சாரக் கண்காட்சிக்கு வேறு ஏற்பாடு நடந்து கொண்டிருந்தது.

ஐரோப்பாவில் ஜூன் — ஜூலை மாதங்க ளின் மற்றொரு சிறப்பு அம்சமாகிய ''தள்ளு படி விற்பனை'' போர்டு எல்லாப் பெரிய டிபார்ட்மெண்டல் ஸ்டோர்களிலும் பெருங் கூட்டத்தை ஈர்த்துக் கொண்டிருந்தது. ஸெல்ஃப்ரிட்ஜிலும், ஹெராட்ஸிலும், கூட் டம் பொங்கி வழிந்தது. ஏராளமான பம்பாய் டெல்லி பெரிய மனிதர்களை இம் மாதங்களில் லண்டனின் பிரபல டிபார்ட் மெண்டல் ஸ்டோர்களில் சந்திக்க முடிந் தது.

சவுத்-எண்ட் கடற்கரைப் பகுதிக்கு ஒரு நாளும், கெண்ட்டென்னிலுள்ள சார்லஸ் டார்வினின் பழைய வீட்டைப் பார்க்க (இன்று இது காட்சிக் கூடமாக்கப்பட்டுள் ளது) ஒரு நாளும் வால்மரில் உள்ள வில்லிங் டன் பிரபுவின் பழைய கோட்டையைப் பார்க்க ஒருநாளும் சென்று வந்தேன்.

புராதனமான மரபுகள், சம்பிரதாயங்க ளில், நம்பிக்கையுள்ள பழைய இங்கிலாந்து மெல்ல மெல்ல மாறிக் கொண்டிருப்பது டெலிவிஷனிலும், பத்திரிகைகளிலும் நேரி லும் தெரிந்தது. வன்முறை, வேலைநிறுத்தம், அமைதியின்மை, ஆகியவை சகஜமாகி இருந்தன. இளைய தலைமுறை அறவே மாறிப் போயிருந்தது.

பிரிட்டனின் கன்ஸர்வேடிவ் கட்சியைச் சேர்ந்த தாட்சர் அரசு கிரேட்டர் லண்டன் கவுன்ஸில் என்ற ஜி.எல்.ஸி. லேபர் கட்சி யின் வசமிருந்ததைப் பொறுக்காமல் அதை ஒழித்துவிட முயன்று கொண்டிருந்தது. ஜி. எல்.ஸி.யில் பிரபலமாயிருக்கும் லேபர் தலை வரான கென்லிவிங்ஸ்டன் அதை எதிர்த்து 'ஜி. எல்.ஸி.யைக் காப்பாற்று' என்ற போராட்டத்தைத் தொடங்கியிருந்தார். நிற வெறியை எதிர்த்ததாலும், லண்டன் பெரு நகருக்குள் போக்குவரத்துக் கட்டணங்களைக் குறைவாகவே வைத்திருந்ததாலும் கென் லிவிங்ஸ்டனுக்கு மக்களிடம் நல்ல ஆதரவு இருந்தது. நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளர் வேலை நிறுத்தத்தை டெலிவிஷனில் காட்டும் போது சுரங்கங்களிலிருந்து லாரிகளில் கரி எடுத்துச் செல்ல முயன்ற முயற்சிகளைத் தடுத்த தொழிலாளர் கல்லெறிதல், வழி மறித்தல் போன்ற வன்முறைகளில் ஈடுபடு

லண்டனிலிருந்து பாரிஸுக்கு



• லண்டனிலுள்ள டவர்பிரிட்ஜ்.

வதையும் கூடக் காட்டினார்கள். எதிர்ப்பாளர்கள் பிரதமர் தாட்சரின் மீது அழுகிய முட்டை எறிவதைக் கூட பி. பி. சி. டெலிவிஷனில் காண முடிந்தது. ஈ.ஈ.ஸி.யில் பிரான்ஸுடன் பிரிட்டனுக்கு மோதல்கள் ஏற்பட்டு நாட்டாண்மை நிலை ஆட்டம் கண்டிருந்தது. பவுண்ட் — ஸ்டர்லிங்கின் மதிப்பு நாளுக்கு நாள் கீழே இறங்கிக் கொண்டிருந்தது. 'நார்த் ஸீ ஆயில்'தான் பிரிட்டனின் எதிர்கால நம்பிக்கை.

ஒழுக்க மதிப்பீடுகள் தளர்ந்திருந்தன. தன்னை விட 20 வயது அதிகமுள்ள மாமியாரை (தன் மனைவியின் தாயை) மணந்த ஒருவனைப் பற்றி ஒரு வாரமாக டெலிவிஷனில் தடபுடல் பட்டது. 6 மாதம் முதல் 13 வயது வரையிலான குழந்தைகளுக்குத் தாயான பார்பரா என்ற 32 வயதுப் பெண்ணைப் பள்ளியில் படித்துக் கொண்டிருந்த 16 வயது வில்லியம்ஸ் மணக்கப் போவது பற்றியும் தன் புதிய வயது மூத்த மனைவியையும் அவளது 5 குழந்தைகளையும் காப்பாற்றுவதற்காகப் படிப்பைப் பாதியில் உதறிவிட்டு இளம் வில்லியம்ஸ் வேலைக்குப் போக இருப்பது பற்றியும் பத்திரிகைகளில் செய்திகள் 'ஹெட்லைனை' அடைத்துக் கொண்டு வந்தன. வில்லியம்ஸின் தாயைவிட அவன் மணக்க இருந்த பார்பரா மூத்தவள். வில்லியம்ஸின் தாயே இந்தத் திருமணத்திற்கு அனுமதியளிப்பதற்குத் தயங்கினாள். 'யங்ஸ்ட் ஹெட் ஆஃப் த ஃபேமிலி' — என்று பத்திரிகைகளில் வில்லியம்ஸின் பேட்டிகள் பிரமாதப்பட்டன.

கணவன் — மனைவி என்று அறிமுகப்படுத்திக் கொள்வதற்குப் பதில், 'வி ஆர் லிவிங் டுகெதர்,' 'வி ஆர் பார்ட்னர்ஸ் இன் லைப்,' 'ஜஸ்ட் வி ஆர் டுகெதர்' — என்றெல்லாம் அறிமுகப்படுத்திக் கொள்ளும் புதுப்பழக்கம் ஆங்காங்கே தலை எடுத்திருந்தது. வன்முறை, திருட்டு, வேலை இல்லாத் திண்டாட்டம், எல்லாம் கூடத் தலை எடுத்திருந்தன. 'லிவர்பூல் ஸ்ட்ரீட் அருகே பெட்டிகோட் லேனில் காரை நிறுத்திவிட்டுப் போய் அருகே இருந்த குஜராத்தி மளிகைக் கடையில் சாமான் வாங்கிவிட்டுத் திரும்பிவந்து பார்த்தால், விண்ட் ஸ்கிரீனை உடைத்துக் காரில் ஏற்கெனவே இருந்த சாமான்கள் களவு போயிருந்தன' — என்பதுபோல் புகார் செய்யும் இந்தியர்கள் எண்ணிக்கையில் அதிகமாகி வருகின்றனர். செளதால் பஜாருக்குப் போய் நின்றால் புதுடில்லி அஜ்மல்கான் ரோடு நினைவுக்கு வருகிறது. முழு லண்டனிலும் நடைபாதைகள், பிளாட்பார மேடைகளில் நடக்கவே இடமின்றிக் கடை பரப்பியுள்ள (இந்திய மரபுப்படி) ஒரே இடம் செளதால் பஜார்தான். அங்கு போனதுமே இந்தியக் கடைவீதி எனப் புரிந்துவிடும்.

முன்னாள் நைஜீரிய மந்திரி ஒருவர் லண்டனில் தாம் இருந்த வீட்டிலிருந்து 'வாக்கிங்'



• பாரிஸிலுள்ள ஈபில் கோபுரம்.

போகிற வழியில் கடத்தப்பட்டுப் பெரிய பெட்டி ஒன்றில் உயிரோடு வைத்துப் பூட்டப்பட்டு 'டிப்ளமேடிக் பேக்கேஜ்' — என லேபிள் ஒட்டி நைஜீரியாவுக்கு விமானத்தில் பெட்டிச் சரக்காகப் புறப்பட இருந்தது 'ஸ்காட்லாண்ட் யார்டால்' கண்டுபிடிக்கப்பட்டுப் பரபரப்பான செய்தியாக அடிபட்டது. இந்த போசடியைக் கண்டு 'டிப்ளமேடிக் இம்யூனிட்டி' — என்ற சலுகையையே எடுத்துவிடலாமா எனப் பிரிட்டிஷ் அரசியல் வட்டாரமே கலகலத்தது. பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு இது பிரச்னை என்றால் 'ஹைகேட்' பகுதியில் ஒரு பழைய யூத சினேகாக்கை விலைக்கு வாங்கி அதன் கட்டடத்தை மாற்றுமலே கோவில் கட்டும் தமிழர்களுக்கு வேறொரு பிரச்னை. இங்கிலாந்தில் பழைய சர்ச் அல்லது சினேகாக்கை விலைக்கு வாங்கிக் கோவில் கட்டலாம். ஆனால் சர்ச்சின் புறத் தோற்றத்தையோ, வடிவமைப்பையோ பழைய படியே வைத்துக் கொண்டிருக்க வேண்டும். சினேகாக்குக்கும் இதே விதி பொருந்தும். யூதக் கோவிலில் மூன்று மாடி உண்டு. அதை வாங்கியிருக்கும் தமிழர்கள் அடித்தளத்தில் ஒரு கல்யாண மண்டபமும், ரெஸ்டாரெண்டும் இரண்டாவது அல்லது மூன்றாவது மாடியில் கோவிலுமாகக் கட்டி வருகிறார்கள். மாடிக்குள் எப்படிக் கோபுரம் கட்டுவது என்பதுதான் இப்போது பிரச்னை. கோபுரம் முகப்பில் தெரிய முடியாது. இந்தச் சர்ச்சை அப்போது 'ஹைகேட்' கோவில் அன்பர்களிடையே இருந்தது.

**நா. பார்த்தசாரதி**

பாரிஸ் நண்பர் ஜனார்த்தனி (ஆண்தான் — பிரெஞ்சு உச்சரிப்பில் ஜனார்த்தன் இப்படி மாறியிருந்தது) லண்டனுக்கு இரண்டு மூன்று முறை ஃபோன் செய்துவிட்டார். லண்டனிலிருந்த லூப்தான்ஸா அலுவலகம் சென்று ஜூலை 8-ந்தேதி பகலில் பாரிஸுக்குத் தேதியை உறுதி செய்துகொண்டு வந்தேன். பி.பி.சி. தமிழோசை சங்கரமூர்த்தி — தமிழ்நாட்டுக் கலை இலக்கிய விஷயங்களை நேரம் போவது தெரியாமல் அரட்டை அடிக்க வேண்டுமென்று ஒரு நாள் அவர் வீட்டிலேயே தங்கச்சொல்லியிருந்தார். வெம்பிளியிலிருந்த அவர் வீட்டிற்கு முந்திய தினம் காலை பதினொரு மணிக்குச் சென்ற நான் அடுத்த நாள் காலையில்தான் மறுபடி திரும்பினேன் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன். ஆர்பிங்டனில் இருந்த மதுரை டாக்டர் மணியின் வயது முதிர்ந்த பெற்றோர் டாக்டர் சூரி தம்பதிகளுடன் இரண்டு நாட்கள் கழிந்தன. மணியின் சகோதரர் கிரி ஷாப்பிங்குக்கு உடன் வந்து உதவினார். தினமலர் ராமசுப்பையரின் பெண் வயிற்றுப் பேரர் டாக்டர் ராமசுப்புவுடன் ஒரு நாள், தற்செயலாக அப்போது லண்டன் வந்திருந்த பச்சையப்பன் கல்லூரி முன்னாள் பேராசிரியர் ராஜியுடன் அவர் மகள் வீட்டில் மின்ஸ்டரில் ஒரு நாள் என்று நாட்கள் கழிந்தன. திடீரென்று 12 நாட்கள் நிமிஷமாய் ஓடிப்போயிருந்தன எனப் புரிந்தது.

* * * * * *

ஜூலை 8ந்தேதி பகல் இரண்டரை மணியளவில் பிரிட்டிஷ் ஏர்வேஸில் புறப்பட்டு (லண்டன் பாரிஸ் கால வித்தியாசம் + ஒரு மணி நேரம்) மாலை 4½ மணிக்குப் பாரிஸின் சார்லஸ் தெ கால் விமான நிலையத்தில் போய் இறங்கினேன். நண்பர் ஜனார்த்தனி, திருமதி ஜனார்த்தனி, அவர்கள் மகன் துரை, ரங்கராமானுஜம் பிள்ளை, ஆகியோர் சார்லஸ் தெ காலுக்கு வந்து அழைத்துச் சென்றனர். பூர்வீகத்தில் பாண்டிச்சேரியைச் சேர்ந்த நண்பர் ஜனார்த்தனி பாரிஸில் குடும்பத்தோடு பல ஆண்டுகளாக வசித்து வருகிறார். பழகுவதற்குத் தங்கமான மனிதர். அவருடைய வீடு பாரிஸ் நகரின் பரபரப்புக்குள்ளிருந்து சற்றே விலகி 'எமரெய்ன் வில்லி' என்ற கிராமத்தில் இருந்தது. பாரிஸிலிருந்து 'மெட்ரோ' வில் இருபத்தைந்து நிமிஷ நேரத்தில் போய்விடலாம். கிராமம் என்ற வார்த்தையை நம் ஊர் அர்த்தத்தில் வசதிக் குறைவான இடம் எனப் புரிந்துகொள்ளத் தேவையில்லை. நகரின் சகல வசதிகளோடும் இயற்கை அழகும், சுத்தமான காற்றோட்டமும், அமைதியும் உள்ள,' பரபரப்பிலிருந்து விலகியிருக்கும் இடங்களே மேனாட்டில் கிராமங்கள் என்று அழைக்கப்பட்டன. 'எமரெய்ன் வில்லி' அப்படிப்பட்ட கிராமமாயிருந்தது. பசிய மரக் கூட்டமும், ரோஜாத் தோட்டமும், செக்கச் செவேலென்று பழங்கள் சடைபிடித்தாற் போல் அப்பிய செர்ரி விருட்சங்களும், ஏப்ரிகாட் பழத் தோட்டங்களும், கோதுமை கதிர் முற்றிச் சாய்ந்த வயல்களும் நிறைந்த — சூழ்ந்த — வனப்பான பகுதி எமரெய்ன் வில்லி.




சுத்தமான பளிங்கு போன்ற சாலைகள். கூப்பிட்ட தூரத்தில் மெட்ரோ ரயில் நிலையம், இரவு ஒரு மணி வரை மெட்ரோ ரயில் வசதி தாராளமாக உண்டு. பச்சைப் பசேலென்று மரக்கூட்டங்களும், வெல்வெட் விரித்தாற் போன்ற புல்வெளிகளும் கிராமத்தைச் சொர்க்கமாக வைத்திருந்தன. பாரிஸில் நான் தங்கியிருக்கும் நாட்களுக்குப் போக்குவரத்துச் செலவை அவ்வப்போது உதிரியாகச் செய்தால் பயங்கரமான அளவிற்கு அதிகமாயிருக்கும் என்று பஸ், ரயில், மெட்ரோ, எதிலும், எங்கும், எப்போதும், நகர எல்லையில் எவ்வளவு தொலைவானாலும், எத்தனை முறையானாலும் போகவர முடிந்த 'ஆரஞ்ச் கார்டு' என்ற குறைந்த கட்டண வரப்பிரசாத சீஸன் டிக்கட் ஒன்றை எனக்கு வாங்கிக் கொடுத்தார் ஜனார்த்தனி. இரயில் நிலையத்தில் ஓர் ஆரஞ்சு நிற அட்டையை வாங்கி அதில் என் படத்தை ஒட்டிக் கொடுத்து நூற்றைம்பது ஃபிராங்க் பணமும் கொடுத்து அதை வாங்கினோம். பாரிஸின் பணவீக்கம் லண்டனை விட அதிகமாயிருந்தது. மெட்ரோ, பஸ், எல்லாவற்றிற்கும் செல்லுபடியாகிற இந்த ஆரஞ்ஜ் கார்டை வாங்காமல் உதிரி உதிரியாகப் பணம் கொடுத்துப் பயணம் செய்திருந்தால் நான் பாரிஸில் தங்கியிருந்த இரு வார காலத்துக்குமே சில ஆயிரம் ஃபிராங்குகள் செலவழிக்க வேண்டியிருக்கும். ஜனார்த்தனியின் ஆரஞ்ஜ் கார்டு யோசனை என்னைத் தக்க சமயத்தில் காப்பாற்றியது என்றே கூற வேண்டும்.

(தொடரும்)

# ஆஸ்திக சமாஜத்தில் கேட்ட அருளுரைகள்

* தான தர்மங்கள் பண்ணுவது என்று வந்தால் யோசனையே பண்ணலாகாது. உடனே பண்ணிவிட வேண்டும். வாமனருக்கு மூவடி நிலம் தர முன்வந்த பலிச்சக்கரவர்த்தியின் மனம் எங்கே மாறிவிடப் போகிறதோ என்று பரபரத்துக் கொண்டு, தாரை வார்க்கத் தீர்த்தப் பாத்திரத்துடன் விரைந்து வந்தாள் அவருடைய தர்ம பத்தினி. மனைவிக்குத் தெரியாமல் கணவனும் தானம் பண்ணக் கூடாது. இருவரும் கருத்து ஒருமித்து தர்மத்தை அனுஷ்டிக்க வேண்டும். பாதி சரீரம்தான் பத்னி...

* யுகம்தொறும் யுகம்தொறும் சாதுக்களைக் காத்தருளவும் துஷ்டர்களை நாசம் பண்ணவும் வருவேன் என்று சொன்ன பகவான் ஏன் இந்தக் காலத்தில் ஒரு அவதாரம் பண்ணவில்லையென்று கேட்பார்கள்.

பகவான் அவதாரம் பண்ணினால் அவருடைய கையில் நிறைய கம்சன்கள், ஹிரண்யன்கள் எல்லாம் கிடைப்பார்கள். ஆனால் அவரால் காத்தருளப்படுவதற்கு ஒரு சாதுவாவது, ஒரு நல்லவராவது அகப்படுவாரோ? பகவான் அவதாரம் பண்ணி யாரை ரட்சிப்பது?

* துஷ்டர்களுக்குக் கூட கருணை காட்டவே முயல்கிறார் பகவான். நீதிமன்ற மொழியில் **benefit of doubt** தர எப்போதும் அவர் சித்தமாய் இருக்கிறார்: இரண்யனை நரசிம்ம மூர்த்தி தன்னுடைய மடியில் கிடத்தி நெஞ்சைப் பிளந்தார். அப்போதும் ஒரு சோதனை. 'இவன் நிஜமாகவே தூஷணை பண்ணுகிறானா? இல்லை வாயளவில் பேசுகிறானா?' என்று பார்த்தானாம் பகவான்!

''மடியில் இருத்தி, உளம் தொட்டு'' என்று எழுதுகிறார்கள் வியாக்யான கர்த்தாக்கள்.

* கட்டறுத்துக் கொண்டு கன்றுக்குட்டி ஓடியது. துரத்திக் கொண்டு ஓடினான் சொந்தக்காரன். கன்று கோவிலைச் சுற்றி ஓடியது. இவனும் வலம் வந்தான். அதுவரை கோவில் பக்கமே போய் அறியாத அந்த ஆசாமியைத் தன்னுடைய பக்தனாக ஏற்றுப் புண்ணியம் சேர்த்தான் பகவான்.

நல்ல காரியங்களை அறிந்து செய்யவேண்டும் என்பது கூட இல்லை. அறியாமலே செய்தாலும் அதற்கான பலன் உண்டு. பகவானின் அருள் உண்டு.

உ. வே. முக்கூர் லக்ஷ்மி நரசிம்மாச்சாரியார் உரையிலிருந்து.

* அடிமுடி தேடிய கதை. திருமாலின் தலையைப் பார்த்தேன் என்று சொன்னான் பிரம்மதேவன். ஒரே ஒரு பொய்தான். ஆனால் அதன் பலன் அவனுடைய பத்னி சரஸ்வதி தேவிக்குக் கூடக் கோவில்கள், பூஜைகள் உண்டு. பிரும்மாவுக்கு வழிபாடே இல்லாமல் போய்விட்டது. வேதங்களில் மட்டும்தான் அவனுக்கு இடம்!

* நம்முடைய சாஸ்திரங்களில் எவ்வளவு பதில்கள் உண்டோ, அவ்வளவுக்குக் கேள்விகளே கிடையாது! நம்முடைய பெருமையை நாம் அறிந்து கொள்ளாததுதான் துரதிர்ஷ்டவசமானது.

—ஸ்ரீ சுகப்பிரம்மம் உரையிலிருந்து.

* காளிதாஸனிலிருந்து நம்ம ஊர் கண்ணதாசன் வரை எல்லோரும் பெண்களின் அழகைச் சொல்லும் போது கருங்கூந்தல், கருவிழி என்றுதான் பாடுவார்கள். இது நம் ஊர் ஸ்டாண்டர்ட்.

இதுவே லண்டனிலானால் தாமிர நிறம்.

* ஸ்ரீ ஜெயராம சர்மா.





* முக்கூர்.



வாரியார்.

தென்னாப்பிரிக்காவிலானால் பெரிய பற்கள், கருப்பு நிறம், இவைதான் அழகு என்பார்கள். ஆக, அழகு என்பது ஊருக்கு ஊர் மாறும்.

ஆனால் எல்லோரும் ஒப்புக் கொள்ளக் கூடிய அழகு பகவானுடைய அழகு. புவனஸௌந்தரன் என்றார்கள்.

* ஒரு சமயம் பகவானுக்குத் தலையில் நோவு கண்டது. உண்மையான பக்தனுடைய பாத தூளி கிடைத்தால் போதும். அணிந்து கொண்டால் குணமாகிவிடும் என்றார்கள். நாரதர் எங்கெல்லாமோ தேடியலைந்து சோர்ந்து போன வேளையில், அப்பாவிகளான கோபியர் 'பாத தூளிதானே.. இதோ தருகிறோம்' என்று சொல்லி யமுனை மண்ணை மிதித்து அள்ளிக் கொடுத்தார்கள். மற்றவர்கள், நம்முடைய பாதத் தூளி பகவானுடைய திருமுடியில் படலாமா என்று யோசித்தபோது, வெகுளியான கோபிகைகளுக்கு ஐயன் குணமடைவது ஒன்றுதான் கருத்தாக இருந்தது.

நாரதர் அப்புறம் தான் நினைத்துப்பார்த்தார்.. "பகவானே! எங்கெல்லாமோ தேடினேனே, நான் உன்னுடைய உண்மையான பக்தனில்லையா? எனக்கு ஏன் சந்தேகம் வந்தது?" என்று.

—ஸ்ரீவத்ஸ ஜெயராம சர்மா உரையிலிருந்து.

* சொக்கட்டான் ஆடிக் கொண்டிருந்த போது துரியோதனன் வருவது கண்டு மரியாதையின் நிமித்தம் பானுமதி எழுகிறாள். ஆட்டத்தில் தோற்றுப்போய் எழுவதாக எண்ணிய கர்ணன் அவளைப் பற்றி இழுத்து அமர்த்துகிற போது, மேகலை அறுந்து மணிகள் சிதறுகின்றன.

'எடுக்கவோ, கோர்க்கவோ' என்று துரியோதனன் கேட்டது பலராலும் பேசப்பட்ட கதை. ஏன் அப்படிக் கேட்டான்?

நண்பனின் மனைவி சகோதரிக்குச் சமமானவள். துரியோதனனுடைய மனைவியுடன் கர்ணன் சொக்கட்டான் ஆடியதில் விகல்பம் ஏதுமில்லை. ஆட்ட சுவாரசியத்தில் நேர்ந்த இந்தச் சம்பவம் துரியோதனனுடைய மனத்தில் எந்தப் பரபரப்பையோ, சந்தேகத்தையோ உண்டாக்கவில்லை. இயல்பாக எடுத்துக் கொண்டான். மணிகளை எடுத்துச் சரடில் கோர்க்க மனநிலை தெளிவாக இருக்க வேண்டும். பதற்றமோ, படபடப்போ இருந்தால் மணிகளைக் கோர்க்க முடியாது. அந்த நேரத்தில் துரியோதனன் இருந்த அசாதாரணமான மனநிலையை வெளிப்படுத்தவே 'எடுக்கவோ, கோர்க்கவோ?' என்று கேட்டதாய்ச் சொல்லப்பட்டது.

* கொடுத்து வருகிற புகழ் இணை சொல்ல முடியாதது. ஒருவனுக்கு எவ்வளவுதான் நல்ல குணம் இருந்தாலும் சரி. ஒரே ஒரு கெட்ட குணம் — லோபம். அது இருந்துவிட்டால் அத்தனை பெருமைகளும் வீணாகிப் போய்விடும்.

* சுவாமி விவேகானந்தர் ஒரு கிளை மடத்துக்கு விஜயம் செய்தார். தோழர்களை வெளியே இருக்கச் சொல்லிவிட்டுத் தான் மட்டும் ஓர் அறைக்குள் நுழைந்தார். வெளியே வர நேரமாயிற்று. நண்பர்கள் ஜன்னல் வழியே அறைக்குள்ளே பார்த்தார்கள்.

சுவாமி கருப்புக் கோட்டை அணிந்து கொண்டு தியானத்தில் இருப்பது தெரிந்தது. இவர்கள் பார்க்கும் போதே தியானம் முடிந்து விவேகானந்தர் எழுந்தார். கருப்புக் கோட்டும் கலைந்து போனது.

தியான சமயத்தில் பல்லாயிரம் கொசுக்கள் அவரை மொய்த்துக் கொண்டிருந்தது தான் தோழர்களுக்குக் கருப்புக் கோட்டாய்த் தெரிந்தது. தன்னை முழுவதும் மறந்த நிலையில், மனமொன்றிப் போய் தியானத்தில் இருந்த சுவாமிக்குக் கொசுக்கடியைப் பற்றிய உணர்வே இல்லை.

—திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள் உரையிலிருந்து.

தொகுப்பு: **சுப்ர. பாலன்.**

* ஸ்ரீ சுகப்பிரம்மம்.



## வட்டமேஜை

* பரீட்சைக்குப் படிப்பது எப்படி? என்ற கட்டுரை இத்தருணத்தில் மாணவர்களுக்கு ஒரு வரப்பிரசாதம்தான்! தேர்வுகள் நெருங்குகின்ற இந்த நேரத்தில் எவ்வாறு செய்தால் சுலபமாக சிறந்த மதிப்பெண்கள் பெறலாம் என்ற தங்கள் அறிவுரைக்கு மாணவர் உலகம் மட்டுமல்ல, ஆசிரியர்கள், பெற்றோர் அனைவருமே கடமைப்பட்டுள்ளார்கள்!
மயிலாடுதுறை, 'பழம்'

* ஒற்றர்கள் — ஓர் அலசல் — நியூஸ்வீக் ஜூலை இதழ் 1982—ல் ஒரு கட்டுரையில் "இந்த அரசின் ரகசியங்கள் விற்பனைக்குக் கிடைக்கும்'' என்று அதன் ஆசிரியர் டி.எம். சில்வோரா எழுதி இருந்தார் என்று குறிப்பிட்டபடி பார்த்ததில் ரகசிய அதிகாரிகள் இதை 1985—ல் தான் கண்டுபிடித்து இருக்கிறார்கள். இது எவ்வளவு பெரிய தவறு?
தேரழுந்தூர், சி. சுப்பு.

* ஆணித்தரம் கொண்ட தர்க்கரீதியான 'புதிய அமைச்சரவை — பழைய அமைச்சர்கள்' என்ற தலைப்பில் எழுதப்பட்ட தலையங்கத்தில் அருண் ஷோரியைக் கண்டேன்.
ஸ்ரீரங்கம், ஆர். கோபாலன்.

* ஹைதராபாத் ஹீரோ கட்டுரை இடம் பெற்ற 'கல்கி' எங்கள் கையில் கிடைத்த அதே வேளையில் ஆஸ்திரேலியாவில் பாகிஸ்தானுக்கு எதிராக 93 ரன்கள் எடுத்து இந்தியாவின் வெற்றிக்கு வழிகோலினார் அஸாருத்தீன் என்ற செய்தியும் கிடைத்து எங்களை இரட்டிப்பு சந்தோஷத்தில் ஆழ்த்தி விட்டது.
தோப்புத்துறை, ஏ.கே. நாசர்.

* 'பரதநாட்டியப் பாதுகாப்புச் சட்டம்' போன்ற நையாண்டிக் கட்டுரைகளைப் படித்து எத்தனையோ மாமாங்கங்கள் ஆகிவிட்டது. கி.ரா. வாரம் தோறும் இதுபோன்ற கட்டுரை ஒன்றை எழுதினால் என்ன?
கிருஷ்ணகிரி, பூபாலன்.

* ஒரு கடலில் தத்தளித்த செதம்பர் (ரக. சியக்) கப்பலைப் பற்றிப் பிட்டு வைத்தது ஏ ஒன்!
வியாசர் காலனி, திருமதி. நாராயணராவ்.

* பாரதியின் உருவத்தில் புதைந்திருந்த திரு. கமலஹாசனின் உருவம் என் புருவங்களை என் நெற்றியின் மீது நீச்சலடிக்கச் செய்தது. அது அருமையிலும் அருமை!
மன்னார்குடி, ரங்கசாமி.

* 3.2.85 கல்கி இதழில் கண்ணீர்க் கடிதம் படித்தேன். நான் சென்னை ஜெயின் கல்லூரியில் 1981—84—ம் ஆண்டுகளில் பி.காம். படித்தேன். எனக்கு மூன்றாவது செமஸ்டரில் வந்த மதிப்பெண் பட்டியலில் விவசாயப் பொருளாதாரம் பாடத்திற்கான மதிப்பெண் குறிப்பிடப்படவே இல்லை. திருத்தம் செய்யப்பட்ட மதிப்பெண் பட்டியலைப் பெறுவதற்கு 9 மாதங்கள் நான் பட்ட கஷ்டங்கள், எழுத்தில் வடிக்க முடியாது.

இப்போது நான் அனைத்துப் பாடங்களிலும் தேர்ச்சிபெற்றுவிட்டேன். புரொவிஷனல் சர்ட்டிஃபிகேட் வாங்குவதற்காக போன மார்ச் மாதம் (1984) ரூபாய் 30/— கட்டி கல்லூரி மூலமாக விண்ணப்பம் அனுப்பினேன். இன்று வரை (2.2.85) சான்றிதழ் கிடைக்கவில்லை. இதற்காக அலைந்து, அலைந்து அலுத்து விட்டது. இந்தப் பல தொல்லைக் கழகத்திலிருந்து எப்பொழுதுதான் விமோசனம் கிட்டுமோ?
சென்னை—44, ஜே. சுரேஷ்.

* நா. பா. அவர்களின் கட்டுரைகளை ஆர்வத்துடன் வாசித்து வருகிறேன். என் மகன் சேகர் கடந்த எட்டு வருடங்களாக ஹாலந்தில் வசித்து வருகிறான். லெய்டன் நகரில் வாழும் ஹாலந்து வாசிகளிடையே ஒரு விநோதமான பழக்கம் நிலவி வருகிறது. ஒவ்வொரு மாதமும் மூன்றாம் திங்கட்கிழமை அன்று தங்கள் வீட்டில் தங்களுக்கு வேண்டாம் என்று கழித்துக் கட்ட வேண்டிய பொருள்களைத் தத்தம் ஃப்ளாட் உள்ள கட்டிடத்தின் எதிரே தெருவில் கொண்டு போய் வைத்துவிடுகிறார்கள்! இவைகளைத் தேவைப்படுகிறவர்கள் எடுத்துப் போகிறார்கள்! இம்மாதிரி தெருவில் கொண்டு வந்து வைப்பவரே தங்களுக்குத் தேவையான வேறு பொருள்களைத் தெருவிலிருந்து தூக்கி வந்துவிடுகிறார்கள். இப்படி சோபா, டீ.வி., ஃப்ரிஜ் போன்ற எத்தனையோ பொருள்கள் கைமாறப் பண்டமாற்று வியாபாரம் பேரமின்றி நடக்கிறது!
சென்னை—102, எஸ். செல்லம்மாள்.

(கடைசி கடிதம் பரிசு பெறுகிறது)



# ஹைக்கூ கவிதைகள்

மரமா தும்மிற்று
இல்லை;
வெடித்தது இலவம் பஞ்சு.

வானவில்
அட, கோமாளி வானமே!
மழை நேரத்திலா
கோவணத்தை உலர்த்துவது?...

பனைமரக் காதுகளுக்கு
தொங்கட்டான் போட்டது—
தூக்கணாங் குருவி!

கற்கோலை தவறுதான்
ஒரு வோட்டு
வீணாகிறதே!

அற்புதமான காவியம்.
அட, என்
கையசினைத!

ஆர். சி. சம்பத்
டைரக்ஷன்
மூன்றாண்டு,
திரைப்படக் கல்லூரி
சென்னை-20

# வேண்டும்

''வேலைக்காகத் தேடியலைந்தேன்
வேண்டும் ஐந்து வருட அனுபவம்
என்றார்கள்...
உதவிப்பணம் ஐம்பது ரூபாய்
என்றவுடன்
ஓடினேன் அங்கே...
வேலையில்லாத பட்டதாரியாக...
இருந்த அனுபவம்
ஐந்து வருடம் வேண்டும்
என்கிறார்களே....!

பாண்டியராஜ,
இளநிலை 2—ஆம் ஆண்டு, தாவரவியல்,
தூய யோவான் கல்லூரி,
பாளையங்கோட்டை—627002.





# நடமாடாத நடமாடும் மருத்துவ மனைகள்

தமிழ்நாட்டில் மொபைல் வேனில் அறுவை சிகிச்சை செய்த முதல் மருத்துவர் டாக்டர் நஞ்சுண்டராவ்.

டாக்டர் நஞ்சுண்டராவ், சென்னை மருத்துவக் கல்லூரி மாணவர்களால் ''சிறந்த பேராசிரியர்'' என்று தேர்ந்தெடுக்கப்பட்ட பெருமைக்குரியவர். அவர் சொல்கிறார்:

''ராஜ் நாராயண் சுகாதார மந்திரியாக இருந்த சமயத்தில் இங்கிலாந்திலிருந்து 24 மொபைல் மருத்துவமனை பஸ்களை வாங்கித் தமிழ்நாட்டிலுள்ள எட்டு மருத்துவக் கல்லூரிகளுக்குத் தலா மூன்று பஸ்களைக் கொடுத்தார். இவை ஒவ்வொன்றும் சுமார் நான்கு லட்சம் ரூபாய் பெறுமானமுள்ளவை. இவற்றின் உள்ளே ஒரு மினி மருத்துவ மனையே இயங்குகிறது. ஒரு ஆபரேஷன் தியேட்டர், பற்களுக்கான சிகிச்சைப் பகுதி, பெண்களைத் தனியாகப் பரிசோதிக்க ஒரு மறைவான இடம், தண்ணீர் டாங்க், குளிர்பெட்டி, ஜெனரேட்டர் மற்றும் தேவையான ஆயுதங்கள் எல்லாம் இதில் அடங்கியிருக்கிறது.

''ஒருவர் கிராமத்திலிருந்து சென்னைக்கு ஹைட்ரசல் ஆபரேஷன் செய்து கொள்வதற்காக வருகிறார் என்று வைத்துக் கொள்வோம். அன்றே அவருக்கு இடம் கிடைத்துச் சேர முடியாது. ஓரிரு நாட்கள் தங்க வேண்டும். பிறகு ஆபரேஷன் முடிந்து ஆறு நாட்கள் கழித்து மீண்டும் வந்து தையல் பிரித்துக் கொள்ளச் சொல்வார்கள். சென்னையில் உறவினர்கள் யாரும் இல்லாத நிலையில் அவர் எங்கே தங்குவார்? இதுபோன்றவர்களுக்கு இந்த வேன் மிகவும் உதவியாக இருக்கும். மேலும் சென்னை மருத்துவமனைகளில் கூட்டம் அதிகமாவதையும் ஓரளவு தடுக்கலாம். இந்த மொபைல் வேன்களைக் கிராமங்களுக்கு எடுத்துச் சென்று அறுவை சிகிச்சைகள் செய்ய வசதியாக இருக்கும். அனுபவம் மிக்க டாக்டர்கள் கிராமங்களுக்குச்சென்று அங்குள்ள இளம் டாக்டர்களுக்குப் பயிற்சி அளித்து வந்தால் அவர்களுக்கு, தனியாக அறுவை சிகிச்சைகள் செய்யத்தைரியம் வரும். இதனால் என்னுடைய மேற்பார்வையில் ஒரு வண்டி அளிக்கப்பட்டது. நான் கிராமங்களுக்கு எடுத்துச் சென்று அறுவை சிகிச்சைகள் செய்ததுடன் பல இளம் டாக்டர்களுக்குப் பயிற்சி அளித்திருக்கிறேன்.

''சமீபத்தில் விருத்தாசலத்தில் ஒரு பெண்மணி முதல் பிரசவத்திற்காக அனுமதிக்கப்பட்டிருந்தாள். சிசேரியன் செய்துதான் குழந்தையை எடுக்க வேண்டுமென்ற நிலை. அங்குள்ள அனுபவமில்லாத டாக்டர்களுக்கு சிசேரியன் செய்யத் தைரியம் இல்லை. அருகிலுள்ள கடலூர் மருத்துவமனைக்கு எடுத்துச் செல்லும்படி கூறினார்கள். போய்ச் சேருவதற்குள் தாயும், குழந்தையும் இறந்துவிட்டனர். நடமாடும் மருத்துவமனை இருந்திருந்தால் இந்த நிலை ஏற்பட்டிருக்காது.

''இது தவிர பொதுக் கூட்டங்கள் நடக்கும் இடங்களில் கும்பலில் மிதிபட்டு அடிபட்டுக் கொள்பவர்களுக்கு உடனடியாகச் சிகிச்சை அளிக்கவும், குடும்பக் கட்டுப்பாடு முகாம்கள் நடத்தவும் இந்த மொபைல் மருத்துவ மனைகள் மிகவும் பயனுள்ளதாக இருக்கும். ஆனால் நான் உபயோகித்து வந்தது சென்னை மருத்துவக் கல்லூரி காம்பவுண்டில் இப்போது உபயோகப்படுத்தப்படாமல் இருக்கின்றது. மற்ற வேன்களின் நிலைமை இப்போது என்ன என்று தெரியாது. அதிலுள்ள சில பாகங்கள் துருப்பிடித்தும் பல பாகங்கள் காணாமல் போயும் உபயோகமில்லாமல் இருக்கின்றன. அருமையான இந்த நடமாடும் மருத்துவமனைகளைச் சரியானபடி பயன்படுத்தினால் கிராமப்புறங்களில் பல இறப்புகளைத் தடுக்கலாம்.''

இவ்வாறு கூறும் டாக்டர் நஞ்சுண்டராவ், சென்னையிலுள்ள பல சமூக நலச்சங்கங்களில் குறிப்பாக அரிமா சங்கம் மூலம் மருத்துவ சேவைகள் பல செய்திருக்கிறார்.

பேட்டி: **கலாமூர்த்தி.**

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600032 (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani

Editor: K. Rajendran

# நறுமணத்துடன் புது மலர்ச்சிதரும் அந்த முதற் காப்பியின் சுவை...



## ...நாளில் எந்நேரத்திலும்.

ஆஹா ! ஒவ்வொரு நாளையும் எத்தனை சிறப்பாக தொடங்கலாம், அம்மா தயாரித்த அந்த புத்துயிரூட்டும் அருமையான முதற் காப்பியுடன் ! ஈடு இணையற்ற அந்த கமகமவென்ற மணம் மற்றும் முழுமையான சுவைதரும் நிறைவு...உங்களுக்கு புத்துணர்ச்சி-யூட்டி, புலன்களைத் தட்டியெழுப்பும் அதன் மகிமை !

காலங்காலமாய் ஒரு சிறந்த எடுத்துக் காட்டு மாதிரி இருக்கும் அந்த காப்பியே எங்களையும் ஸன்ரைஸை தயாரிக்க ஊக்கமளித்தது.

**ஸன்ரைஸ். சிறந்த காப்பிக்கு ஒரு நற்சான்று.**

அம்மா தயாரிக்கும் காப்பி போலவே தயாரிக்கப்பட்டது ஸன்ரைஸ். புது மலர்ச்சியளிக்கும் அந்த முதற் காப்பியை எந்நேரத்திலும் விரும்பும் காப்பி அன்பர்களுக்காக. அந்த முதற் காப்பியின் நறுமணத்தையும், சுவையையும் எந்நேரத்திலும் நீங்கள் வேண்டும் போதெல்லாம் அளிக்கும் ஒரு சிறந்த காப்பி-சிக்கரி கலவை.




**Nestlé®**

# ஸன்ரைஸ

**இன்ஸ்டன்ட் காப்பி-சிக்கரி ப்ளெண்ட்**

**அம்மாவின் காலை காப்பியின் புத்துணர்ச்சியூட்டும் நறுமணத்துடன்.**

SL-8817A.TAM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka





